உ

# ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்க்குக் கனகாபிஷேகங்கள்

வித்துவான்
வே. மகாதேவன். எம்.ஏ. (எம்.ஃபில்)

வெளியிட்டோர்
ஸ்ரீ காமகோடி ஆய்வு மையம்
ஆஸ்ரமம்
46A, கல்யாணராமன் தெரு,
கும்பகோணம்.

ஸ்ரீ காமகோடி ஆய்வு மைய வெளியீடு. எண். 2
1987 ஜூலை—5000 பிரதிகள்

# ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்க்குக் கனகாபிஷேகங்கள்

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள்
ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள்
திருமரபினர்க்கு நடைபெற்ற கனகாபிஷேகங்களைச்
சமய நோக்குடனும் வரலாற்று நோக்குடனும் விளக்கும்
ஆய்வுநூல்.

நூலாசிரியன்
வித்துவான். வே. மகாதேவன், எம்.ஏ. (எம்.ஃபில்)

விலை ரூபாய் பத்து.

[விற்பனைத் தொகை ஆய்வு மையப் பணிகட்குப் பயன்படுத்தப் பெறும்.]

கிடைக்குமிடம் :
வே. மகாதேவன், எம்.ஏ.
ஸ்ரீகாமகோடி ஆய்வுமையம்
ஆஸ்ரமம்
46A, கல்யாணராமன் தெரு,
கும்பகோணம்-612 001.

அமரர் V. T. ராஜன் நினைவாக வெளியிட்டளிப்போர்
ராஜன் அண்ட் கோ,
சென்னை-1.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய
காஞ்சி
ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள்

**ஜகத்குரு**
**ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள்**
பொன்னுர் திருவடிப் போதுகட்கு

'காஞ்சிப் பெரியவர்க்குக் கனகாபிஷேகங்கள்'
என்னும்
இந்நூன்மலரை

கனகாபிஷேகப் பெருவிழாவை முன்னிட்டு

ஸ்ரீ பாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுது
வணங்குகிறேன்.

பணிவுடன்,
**வே. மகாதேவன்**

## முன்னுரை

இறையன்பர்களே,

வணக்கம்.

நடமாடும் தெய்வம்—காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகட்குக் கனகாபிஷேகம் நிகழவுள்ளது. தோன்றாத்துணையாய் இருந்து எம்மனோரை ஆட்கொள்ளும் தோன்றல்; திருமுறை ஓதுவாரையும் திருமுறை உரையாளர்களையும் கௌரவித்த மஹான்; என் சிந்தனைகட்குச் செம்மை சேர்க்கும் என் இதயத் தெய்வம்; நினைக்குந் தோறும், பேசுந்தொறும், காணுந்தொறும் எப்போதும் அனைத்தென்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும் அருளாளர்; ஸ்ரீமத் ஆசார்யாளுக்குக் கனகாபிஷேகம் நிகழும் காலத்து என் எழுத்தினை அவர்தம் திருவடிக் கமலங்களில் காணிக்கையாக்கவேண்டும் என்னும் பேரவாவினால் உருவான சிறு நூல் 'ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்களுக் கனகாபிஷேகங்கள்' என்னும் இந்நூல். இந்நூலுள் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர்கட்கு அளிக்கப்பட்ட கனகக் கொடைகள்; நிகழ்ந்த கனகாபிஷேகங்கள் உரிய ஆவணச் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூல் உருவான உடன் காஞ்சிக்குச் சென்றேன்; ஜகத்குரு பூஜ்யஸ்ரீ பரமாசார்யாள் திருமுன்னிலையில் விண்ணப்பித்துக் கொண்டேன். பூஜ்யஸ்ரீ பெரியவாள் கையெழுத்துப் பிரதியை முற்றிலும் பார்வையிட்டார்கள். அச்சிட்டுக்கொள்ள அருளாசியளித்தார்கள். பின்னர்ப்பூஜ்ய ஸ்ரீ பாலபெரியவாள் திருவடி பணிந்து அருளாசிபெற்றேன்.

சென்னை V. T. ராஜன் அவர்கள் மக்களும் என்னினியநண்பர்களுமான திருவாளர்கள் T.Vரமணி அவர்களும் T. சந்திரமவுளி அவர்களும் இந்நூலினைத் தம் தந்தையார் அமரர் V. T. ராஜன் நினைவாக இலவசமாக அச்சிட்டளிக்க இசைந்தனர்.

இந் நன்னாளில், எனையீன்று புறந்தந்த மறைந்த அன்னபூரணி அம்மையார் அவர்களையும், துள்ளித்திரிகின்ற காலத்துத் துரிசடக்கிப் பள்ளிக்குச் செல்லவைத்த என் தந்தையார், ஸ்ரீ கா. ம. வேங்கடராமையா, M.A. BOL. (செயலர் ஸ்ரீகுமரகுருபரர் கல்விக்குழுமம் திருப்பனந்தாள்) அவர்களையும் எனக்குக் கல்வெட்டுப் பயிற்சியளித்த தமிழகத் தொல்லியல் துறை

டைரக்டர் டாக்டர் திரு இரா. நாகசாமி அவர்களையும் என் நூல்களை முதன் முதலாக வெளியிடப் பொருளுதவி செய்து ஆக்கமும் ஊக்கமும் அளித்த முத்தமிழ்ப் புரவலர் பெங்களூர் டாக்டர் திரு ம. வே. ஜெயராமன் எம். ஏ. அவர்களையும் ஆய்வுப்பணிகளில் நான் ஈடுபடுவதனை ஊக்குவிக்கும் ஸ்ரீ K.G.S. மேனிலைப்பள்ளி நிர்வாகக் குழுவினர் மற்றும் செயலர் திரு M. N. நடராஜன் அவர்களையும் ஸ்ரீ காமகோடிபீடம் தொடர்பான ஆய்வுப் பணிகளில் எனக்கு ஆய்வுவழிகாட்டிகளாக இலங்கும் கும்பகோணம் அரசினர் ஆடவர் கலைக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு தி. க. சுப்பிரமணியம் M.A., M.Phil., பேராசிரியர் திரு. S. சுந்தரேசன், M.A., M.Phil., ஆகியோரையும் நெஞ்சார நினைந்து நன்றி கூர்கிறேன்.

இந் நூலில் உள்ள புகைப்படங்கள் பலவற்றைத் தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூலகத்தினர், அளித்தனர் பூஜ்ய ஸ்ரீ பரமாசார்யாள் கனகாபிஷேகப் படங்களைக் கலைமகள் மாத இதழினர், ஸ்ரீ சங்கர பக்தஜனசபாவினர் உதவினர். ஆகமங்களில் கனகாபிஷேகம் பற்றிப் புதுவை பிரெஞ்ச் இந்திய கலைக்கழகம் டாக்டர் ஸ்ரீ N.R. பட் அவர்கள் ஒரு கட்டுரை அளித்துதவினர் இந்நூலினை சென்னை ராஜன் அண்ட் கோ வினர் சிறப்புற அச்சிட்டனர். இவ்வனைவருக்கும் பெரிதும் நன்றியறிதல் கடப்பாடுடையேனாவேன்.

இந்நூல் விற்பனையால் கிடைக்கும் வருவாய் ஸ்ரீ காமகோடி ஆய்வு மையப் பணிகளில் பயன்படுத்தப்படும்.

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் ஜகத்குரு ஸ்ரீ சங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் பொன்னார் திருவடிப்போதுகள் என்முடிமேலின.

இந்நூலில் உள்ள குறைகளைப் பொறுத்து நிறைமட்டும் கொண்டு எளியேனை ஊக்குவிக்குமாறு அன்பர்களைப் பணிவோடு வேண்டுகிறேன்.

நன்றி

இவ்வண்ணம்
வே. மகாதேவன்

5–7–87
கும்பகோணம்.

## நூலின் உள்ளே

# I. காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடம்

## சில பொதுச்செய்திகள்

காஞ்சிமாநகர் நகரங்களுள் தலையாயது; சப்தமோக்ஷபுரி களுள் ஒன்றும் சக்திபீடங்களுள் ஒன்றும் விளங்கும் திருநகரம். 'கல்வியிற் கரையிலாக் காஞ்சி மாநகரின்' எண்ணில்லாப் பெருமைகளுள்[1] தலையாயது இங்கு ஸ்ரீ காமகோடி பீடம் ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீமடம் அமைந்துள்ளமையேயாகும்.

அத்வைத நெறிபுரந்தவரும் அறுசமயஸ்தாபனம் செய்தவரு மான ஸ்ரீஆதிசங்கர பகவத் பாதர் கி.மு. 509-(கலியப்தம் 2593) இல் 'காலடி' யில் அவதரித்தனர்[2] இந்திய மெங்கணும் சென்று சமயப் பணிகள் ஆற்றிய இவ்வருளாளம் காஞ்சிமாநகர்க்கு எழுந்தருளினர். ஸ்ரீகாமாட்சியம்மனுக்கு ஸ்ரீசக்கரப் பிரதிஷ்டை புரிந்தனர்; போற்றிப் பரவினர். கி.மு. 482-இல் சர்வக்ஞ பீடமான ஸ்ரீகாமகோடி பீடமேறினர். அதன் பின்னர்ச் சில ஆண்டுகள் காஞ்சியிலேயே உறைந்து கி.மு. 477-இல் சித்தியடைந் தனர்[3] இன்றும் காஞ்சி ஸ்ரீகாமாக்ஷி அம்மன் கோயிலில் ஸ்ரீ ஆதிசங்கரர்க்குச் சந்நிதியுள்ளது.

ஆதிசங்கர பகவத் பாதரை முதல்வராகக் கொண்ட அருள் மரபே ஸ்ரீகாமகோடி பீடாதிபர் திருமரபாகும். பன்னூறு ஆண்டுக்கு முற்பட்ட குருரத்னமாலா, குருரத்னமாலாசுஷமா

---

1. நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றே
   மன்றேரான்கச்சி வனப்பு—தண்டியலங்காரம்,
   கலைகடல் கலிங்கம்ஆர்த்தகாசினி மடந்தைக்கு உற்ற
   முலையதாம் மூலாதாரத் தானமாய் மொழிவர் அன்னாள்
   புனைமணிக் காஞ்சிப் பூணாம் பொற்பதாற் காஞ்சி என்ப—
   ஸ்ரீசங்கரவிஜயசிந்தாமணி 9-2.
2. Chronology of Nepal History Reconstructed—Sri Kota Venkata chellam. pp. 111–116. ஆதிசங்கரர் அருளிய ஸ்ரீகாமாக்ஷி ஸ்தோத்ரம். எமது முதல் வெளியீடு முன்னுரை.
3. a. Sri Sankaracharya and his Kamakoti Peetha–N. K. Venkatesan, M.A. pp. 11–17 IBID IInd Edn. 1931 Appendix b.
   b. The Journal of Oriental Research, Madras Vol. I P. IV Oct. 1927.

   c. The Traditional age of Sri Sankaracharya and Maths - Nataraja Iyer and Lakshminarasimha Sastry 1968 - Chap III. Pages 53–73.

(விரிவுரை) புண்யஸ்லோகமஞ்சரி[1] முதலான பலப்பல வடமொழி நூல்கள் ஸ்ரீ காமகோடி பீடாதிபர் அருள் வரலாற்றை விளக்குவன. இம்மரபு, செப்பேடுகள், கல்வெட்டுகள், ராஜதரங் கணியம் முதலான பல தொல்லிலக்கியங்கள், தஞ்சை சரஸ்வதி மஹால், சென்னை ஆவணக்களரி முதலான இடங்களில் உள்ள காகித ஆவணங்கள் ஆகியவற்றுள் குறிக்கப்பெறும் தொன்மை யும் பெருமையும் சான்றதாகும். இவ்வரலாற்று மூலங்கள் ஸ்ரீகாமகோடி பீடாதிபர் திருமரபு ஆற்றொழுக்காக - வழிவழி யாகத் தொடர்ந்த பேருண்மையைக் காட்டுகின்றன; காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி ஈறான எல்லாப் பகுதிகளுக்கும் ஸ்ரீகாமகோடி பீடாதிபர் குருநாதராக இலங்கிய செய்தியை இயம்புகின்றன.

கி.பி. 1750-ஐ ஒட்டித் தமிழகத்தின் வடபகுதியில் குறிப்பாகத் தொண்டை நாட்டில் அமைதியின்மை நிலவிற்று.[2] இந்து தேவாலயங்களும் துறவியரும் பாதுகாப்பற்றிருந்தனர்.[3] இத்தகு சூழ்நிலையில் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் 1746-இல் 'பாதுகாப் பான இடத்தில் உறையும் நோக்குடன்' தென்னகம் நோக்கிச் சென்றார். இடைவழியில் உடையார்ப்பாளையம் ஜமீனில் சில காலம் உறைந்தார்.[4] அங்குத் தஞ்சை மராட்டிய மன்னன்

---

1. ஸ்ரீசதாசிவபோதரின் (1523–1529) புண்யஸ்லோகமஞ்சரி; இதன் பரிசிஷ்டா (இணைப்பு—ஆத்மபோதர் எழுதியது); ஸ்ரீசதாசிவ பிரம்மேந்திரர் (ஸ்ரீபரமசிவேந்திரர் காலம் 1539–1586) எழுதிய குருரத்தினமாலா: இதற்கு ஆத்மபோதர் 1720-இல் எழுதிய விரிவுரை (சுஷ்ஹமா);ஆகியவை வரலாற்று வணங்களோடு பெரும் தொடர்புடையன; அவற்றால் உறுதியுறுவன.

2. கர்நாடக யுத்தமும் அதற்குமுன் மராட்டிய அரசர்க்கும் ஆர்க் காட்டு நவாப்புக்கும் இடையிலான போர்களுமே இதற்குக் காரணமாம்.

3. பாதுகாப்பு இன்மையையும் பிரதாபசிம்மன் பாதுகாப்பளித் தமையையும் ராநாகிருஷ்ணகவி பண்டிட் என்பவர் எழுதிய 'பிரதாபசிம்ம விஜயப் பிரபந்தம்' என்னும் மராட்டி நூல் விளக்கும். பிரதாபசிம்ம விஜயப் பிரபந்தம், ஏ. கிருஷ்ணசாமி மாடிக், ஆங்கில மொழி பெயர்ப்பு, சரஸ்வதிமகால், தஞ்சை. வரிசை எண். 5, 1950 காண்க.

4. பராபரகுரு விருத்தாந்தம் - பிருந்தாவனம் டிரஸ்ட் வெளியீடு கும்பகோணம் 1981–பக். 1–2.

ஸ்ரீமத் ஆசார்யாளைத் தரிசித்துத் தன்னுட்டில் வந்துறையுமாறு வணங்கி வேண்டினான்[1]

அரசனின் வேண்டுகோட் கிணங்கப் பூஜ்ய ஸ்ரீபெரியவாள் தஞ்சைசென்று அவன் அரண்மனையில் சிலகாலம் இருந்தனர். அக் காலத்து ஸ்ரீமத் ஆசார்யாள் 'காவிரிநதி தீரத்தில் வசிக்க வேணும்' என்கிற தம் திருவுளக்குறிப்பை[2] அரசனிடம் தெரிவிக்கவே அரசன் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளுக்குக் கும்பகோணத் தில் காவிரி நதிக்கரையில் பிராசீனமாய்[3] ஸ்ரீமடத்தின் ஆதிக்யத் திருந்த் ஸ்ரீ சங்கரமடத்தினை விரிவாக்கிக் எடுப்பித்தளித்தனன்;[4] ஸ்ரீபகவத்பாதர் படித்துறை உருவாயிற்று. ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் குடந்தையில் இருந்து உறைந்தனர்[5]

---

1. சரஸ்வதிமஹால் மோடி Vol. 8 P 36-40 கூட்: 31-c 60–1–6 and The Maratas of Tanjore—K. R. Subramanyan - Chap. 7. page 48.
2. காஞ்சி ஸ்ரீகாமகோடிபீடாதிபதிகள்.... ஸ்ரீசங்கராசார்ய சுவாமி கள் அவர்கள் ஸ்ரீமடத்தின் முக்யதஸ்த்தாவேஜீகள் - முதல் பாகம் மூன்றும் பதிப்பு–1955-பக்கம் 68-ல் 20.
3. சங்கரர் காலம் முதலாகவே உள்ளதென்பர் சிலர்—தஞ்சை கெஜடீர் (1906) பக்கம்–208; பிற்பட்ட தென்பாரும் உளர் எவ்வாருயினும் அது 1750-க்கு முற்பட்டதாதல் ஒருதலை.
4. தமிழ்ப் பல்கலைக் கழகம் 4-74-5. மோடி ஆவணம்.
5. ஸ்ரீமடம் கும்பகோணம் போயிற்று என்ருல் ஏதோ சர்க்கார் ஆபிசை ஒரூரில் மூடி வேரூரில் திறப்பதுபோல எண்ணக்கூடாது. ஸ்ரீகாஞ்சி ஸ்ரீகாமகோடி பீடத்துக்குச் சொந்தமான மடங்கள் காஞ்சீபுரம், திருவானைக்கா, திருவிடை மருதூர், கும்பகோணம், திருவொற்றியூர் முதலிய அநேக இடங்களில் இருக்கின்றன. இவைதவிர ஆசார்யாள் எப் போதும் சுற்றுப் பயணத்திலேயே இருப்பார்கள். அவர்கள் இருக்கும் இடத்தில்தான் யோகலிங்கமான சந்திர மௌலீச் வரருக்குப் பூசைநடக்கும். அவர்கள் இருக்கும் கிராமந்தான் அன்றைய ஸ்ரீமடத்தின் ஸ்தானம். நமது ஆசார்யாளே பீடாரோஹணம் செய்த புதிதில் மஹேந்திர மங்கலத்தில் மூன்று வருஷங்களும் சமீபத்தில் இளையாத்தங்குடியில் மூன்றுவருஷங்களும் தங்கி இருந்தார்கள்...'ராமன் இருக்கு மிடம் அயோத்தி' என்பதுபோல ஸ்ரீஆசார்யார்கள் இருக்கும் இடம்தான் ஸ்ரீமடம் எனினும் எப்போதும் ஓர் அயோத்தி உள்ளதுபோலக் காஞ்சி என்ற மூலஸ்தானமும் உண்டு.

—கல்கி தீபாவளிமலர். 1965. பக். 1004.

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபரில் 62-ஆவது பீடாதிபதிகளாகிய ஜகத்குரு நான்காம் சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள் (1746-1783) முதல் 67-ஆவது பீடாதிபதிகளாகிய ஸ்ரீமகாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகள் (1907) வரை குடந்தையில் உறைந்தவராவர்.

காஞ்சி ஸ்ரீகாமகோடி சங்கராசார்ய சுவாமிகள் திருமரபினர் ஆற்றிய சமயப்பணிகள் சாலப்பல; அற்புதங்களோ அளவிடற்கரியன.

ஊமையாய் இருந்ததொரு சிறுவனைப் பேசவைத்து ஜகத்குருவாக்கினர் ஒரு ஆசார்யாள்[1]

தம் குருவருளால் பெரும்புலமை பெற்ற அந்த ஜகத்குருநாதர் சாதாரணமான ஒரு குதிரைப்பாகனையும் யானைப்பாகனையும் கவிஞனுக்கினர்; நாடகப் படைப்பாளராக்கினர்[2]

கண்பார்வை இழந்த காஷ்மீர மன்னனுக்குப் பார்வை நல்கிப் பாவன்மையும் அளித்தார் ஒரு அருளாளர்[3]

இப்படிப் பலப்பல அற்புதங்களை ஆற்றிய திருமரபில் 68 ஆவது பீடாதிபதிகளாக எழுந்தருளி ஜகத்குரு ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள் 1907 பிப்ரவரி முதல் அருள் பாலித்து வருகின்றனர். ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்யு சுவாமிகள் 1954 மார்ச் முதல் அருளாட்சி செய்து வருகின்றனர். 1983-ல் குழந்தைப் பெரியவர் ஜகத்குரு ஸ்ரீசங்கரவிஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அருட்கோலம் பூண்டு சமயம் புரக்கின்றனர்.

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் அருள் வரலாறு விரிப்பின் பெருகும் தன்மையது. எனவே சில குறிப்புக்கள் மட்டும் இங்குக்கூறப்பெறும்.[4]

---

[1] 19ஆவது பீடாதிபதிகளாகிய வித்யாகனேந்திரர் (385–398)

[3] 20ஆவது பீடாதிபதிகளாகிய ஸ்ரீமூகசங்கரர் (398–437)—ஜகத்குருதிவ்ய சரித்திரம்—ஆத்ரேய ஸ்ரீகிருஷ்ணசாஸ்த்ரி இரண்டாம் பதிப்பு (1930) பக்கம் 60–2

[2] 41ஆவது பீடாதிபதிகளாகிய கங்காதரேந்திரர் (915—950) Ibid. page 74.

[4] குறிப்பு விவரப் பட்டியல் The Trad. Age of Sankaracharya and Maths—நடராஜ ஐயர் பக்கம் 143—6 ஐ அடிப்படையாகக் கொண்டது.

# காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம்

## ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் திருமரபுப் பட்டியல் (குறிப்புக்களுடன்)

| எண் | திருநாமம் | ஜன்மக்ஷேத்ரம் | சித்தியுற்ற ஸ்தலம். | ஆண்டு | மாதம் | பக்ஷம் | திதி | அருளாட்சி யாண்டு. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீசங்கர பகவத்பாதர் | காலடி | காஞ்சி | கி.மு. 477 | வைசாகம் | சு.ப. | 11 | 509–477 |
| 2. | சுரேச்வராசார்யர் | காஷ்மீர் | ,, | கி.மு. 407 | ஜேஷ்ட | சு.ப | 12 | 70 |
| 3. | ஸர்வக்ஞாத்மேந்திர சரஸ்வதி | தாம்ரவருணி | ,, | கி.மு. 364 | வைசாக | கி.ப. | 14 | 112 |
| 4. | சத்திய போதர் | அமராவதி தீர்த்தம். | ,, | கி.மு. 268 | மார்க்கசீர்ஷ | ,, | 8 | 104 |
| 5. | ஞானானந்தர் | மங்கலம் | ,, | கி.மு. 205 | ,, | சு.ப. | 7 | 63 |
| 6. | சுத்தாநந்தர் | வேதாரண்யம் | ,, | கி.மு. 124 | ஜ்யேஷ்ட | ,, | 6 | 81 |
| 7. | அனந்தானந்தர் | சேரநாடு | ஸ்ரீசைலம் | கி.பி. 55 | வைசா | கி.ப. | 9 | 69 |
| 8. | கைல்யாநந்தர் | திருப்பதி | புண்யரச காஞ்சி | கி.பி. 28 | மகர | ,, | 1 | 83 |
| 9. | க்ருபாசங்கரர் | ஆந்திரம் | விந்தியமலை | கி.பி. 69 | கார்த்திக | கி.ப. | 3 | 41 |
| 10. | சுரேச்வரர் | மகாபலேச்வரம் | காஞ்சி | கி.பி. 127 | ஆஷாட |  | பூ | 58 |
| 11. | (சிவானந்த) சித்கனர் | கர்நாடகம் | விருத்தாசலம் | கி.பி. 172 | ஜேஷ்ட | கி.ப. | 10 | 45 |
| 12. | சந்திரசேகரர் I | பாலாறு அருகில் | சேஷாசலம் | 235 | ஆஷாட | கி.ப. | 9 | 63 |
| 13. | சச்சித்கனர் | கெடிலமருகில் | காஞ்சி | 273 | ம்ருகசீரிஷ | ,, | 1 | 37 |
| 14. | வித்தியாகனர் I | ஆந்திரம் | அகஸ்தியமலை | 317 | ,, | ,, | அமாவாசை | 45 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 15. | (கீஷ்பதி) கங்காதரர் | காஞ்சி | காஞ்சி | 329 | சைத்ர | சு.ப. | 1 | 12 |
| 16. | உஜ்வல சங்கரர் | தபதிதீரம் | காஷ்மீர் | 367 | வ்ருஷப | சு.ப. | 8 | 38 |
| 17. | பாலகுரு சதாசிவர் | காஷ்மீர் | த்ரியம்பகம் | 375 | ஜ்யேஷ்ட | சு.ப. | 10 | 8 |
| 18. | யோகிதிலக சுரேந்திரர் | மகாராஷ்ட்ரம் | உஜ்ஜைனி | 385 | மார்கசீ | சு.ப. | 1 | 10 |
| 19. | மார்த்தாண்ட வித்தியாகனர். | ,, | கோதாவரி தீரம். | 398 | பாத்ரபத | கி.ப. | 9 | 13 |
| 20. | மூகசங்கரர் | ,, | ,, | 437. | சிராவண | — | பூ | 35 |
| 21. | ஸார்வபௌம சந்திரசேகரர். | கொங்கணம் | காசி | 447 | ,, | கி.ப. | 8 | 10 |
| 22. | பரிபூர்ணபோதர் | ரத்னகிரி | ஜகந்நாதம் | 481 | கார்த்தி | சு.ப. | 9 | 34 |
| 23. | சத்சித்சுகர் | ஸ்ரீகாகுளம் | ,, | 512 | கார்த்திக | ,, | 7 | 31 |
| 24. | சித்சுகர் | கொங்கணம் | ரத்னகிரி | 527 | சிராவண | கி.ப. | 9 | 15 |
| 25. | ஸச்சிதாநந்த கனர் | ஸ்ரீமுஷ்ணம் | கோகர்ணம் | 548 | ஆஷாட | சு.ப. | 1 | 21 |
| 26. | பிரக்ஞானகனர் | பிணுகிதீரம் | காஞ்சி | 564 | வைசாக | ,, | 8 | 16 |
| 27. | சித்விலாசர் | ஹஸ்திகிரி | காஞ்சி | 577 | சைத்ர | | வருடப் பிறப்பு | 13 |
| 28. | மகாதேவர் I | மிதிலா | ,, | 601 | கார்த்திக | கி.ப. | 10 | 24 |
| 29. | பூர்ணபோதர் I | ஆந்திரம் | ,, | 618 | ச்ராவ | சு.ப. | 10 | 17 |
| 30. | போதர் I | ,, | ,, | 655 | வைசாகம் | கி.ப. | 4 | 37 |
| 31. | பிரம்மானந்தகனர் | கடிலம் | ,, | 668 | ஜ்யே | சு.ப. | 12 | 13 |
| 32. | சிதானந்தகனர் | ஆந்திரம் | ,, | 672 | மிருகசீ | சு.ப. | 6 | 4 |
| 33. | சச்சிதானந்தகனர் | ,, | ,, | 692 | பத்ரபத | கி.ப. | 6 | 20 |
| 34. | சந்திரசேகரர் II | வேகவதிதீரம் | ,, | 710 | மிருகசீ | | அமா | 18 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 35. | சித்சுகர் II | வேதாசலம் | சஹ்ய ம.தொ. | 737 | ஆஷாட | சு.ப. | 6 | 27 |
| 36. | சித்சுகானந்தர் | பாலாறுநதிதீரம் | காஞ்சி | 758 | அஸ்வீன | | பூர்ணிமா | 21 |
| 37. | வித்யாகனர் II | — | சிதம்பரம் | 788 | புஷ்ய | சு.ப. | 2 | 30 |
| 38. | அபிநவசங்கரர் | சிதம்பரம் | இமயாலே தத்தாத்ரேயர்குகை. | 840 | ஆஷாட | | அமா | 52 |
| 39. | ஸத்சித் விலாசர் | மராட்டம் | காஞ்சி | 873 | வைசா | | பூர்ணி | 33 |
| 40. | சோபனமகாதேவர். | கர்னாடகம் | ,, | 915 | வைசா | சு.ப. | 6 | 42 |
| 41. | கங்காதரர் II | பிமாநதிதீரம் | ,, | 950 | சிரவ | சு.ப. | 1 | 35 |
| 42. | பிரம்மாநந்தகனர் | கர்நாடகம் | ,, | 978 | கார்த் | சு.ப. | 8 | 28 |
| 43. | ஆநந்தகனர் | துங்கபத்ரா | ,, | 1014 | சைத்ரம் | சு.ப. | 9 | 36 |
| 44. | பூர்ணபோதர் II | கர்னாடகம் | ,, | 1040 | பாத்ர | கி.ப. | 13 | 26 |
| 45. | பரமசிவர் I | ,, | ,, | 1061 | அஸ்வீன | சு.ப. | 7 | 21 |
| 46. | ஸாந்த்ரானந்தபோதர் | ,, | அருணாசலம் | 1098 | ஆஷாட | | அமா | 37 |
| 47. | சந்திரசேகரர் III | குந்தியாறு | ,, | 1166 | சைத்ர | | அமா | 68 |
| 48. | அத்வைதானந்த போதர் | பினாகியாறு | சிதம்பரம் | 1200 | ஜேஷ்ட | சு.ப. | 10 | 34 |
| 49. | மகாதேவர் II | சாயாவனம் | கடிலம் | 1247 | கார்த் | கி.ப. | 8 | 47 |
| 50. | சந்திரசூடர் I | — | ,, | 1297 | ஜேஷ் | சு.ப. | 6 | 50 |
| 51. | வித்தியாதீர்த்தர் | பில்வாரண்யம் | ஹிமாசலம் | 1385 | மக | கி.ப. | 1 | 88 |
| 52. | சங்கரானந்தர் | மத்யார்ச்சுனம் | காஞ்சி | 1417 | வைசாக | சு.ப. | 1 | 32 |
| 53. | பூர்ணானந்த சதாசிவர் | நாகாரண்யம் | ,, | 1498 | ஜ்யேஷ் | சு.ப. | 10 | 81 |
| 54. | வியாசலமஹாதேவர் | காஞ்சி | வ்யாசாசலம் | 1507 | ஆஷாட | கி.ப. | 1 | 9 |
| 55. | சந்திரசூடர் II | அஸ்மசாலா | காஞ்சி | 1524 | மீன | சு.ப. | 11 | 17 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 56. | சர்வக்ஞசதாசிவபோதர் | பெண்ணற்றுதீரம் | ராமேச்வரம் | 1539 | சைத்ர | சு.ப. | 8 | 15 |
| 57. | பரமசிவர் II | பம்பாதீரம் | ச்வேதாரண்யம் | 1586 | ச்ராவ | சு.ப. | 10 | 47 |
| 58. | ஆத்மபோதர் | விருத்தாசலம் | கடிலம் | 1638 | துலா | கி.ப. | 8 | 52 |
| 59. | பகவந்நாம போதர் | காஞ்சி | கோவிந்தபுரம் | 1692 | பாத்ரபத | | பூ | 54 |
| 60. | அத்வைதாத்மப்ரகாசர் | வசிஷ்டாநதி | ,, | 1704 | சைத்ரா | கி.ப. | 2 | 12 |
| 61. | மகாதேவர் III | | திருவொற்றியூர் | 1746 | ஜ்யேஷ்ட | சு.ப. | 9 | 42 |
| 62. | சந்திரசேகரர் IV | ,, | கும்பகோணம் | 1783 | புஷ்ய | கி.ப. | 2 | 37 |
| 63. | மகாதேவர் IV | கும்பகோணம் | ,, | 1814 | ஆஷா | சு.ப. | 12 | 31 |
| 64. | சந்திரசேகரர் V | — | ,, | 1850 | கார்த் | கி.ப. | 2 | 37 |
| 65. | சுதர்சன மஹாதேவர் | மத்தியார்ச்சுனம் | இளையாத்தான் குடி. | 1891 | பால்குண | | அமா | 40 |
| 66. | சந்திரசேகரர் VI | உதயம்பாக்கம் | கலவை | 1907 | மக | கி.ப. | 8 | 17 |
| 67. | மகாதேவர் | திருவிசலூர் | ,, | 1907 | பால்கு | சு.ப. | 1 | 7 நாட்கள் |

68. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜ காசார்ய வர்ய ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜ காசார்யவர்ய ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள்; ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜ காசார்ய வர்ய ஜகத்குரு ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் ஆகியோர் இந்நாளில் காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடத்து இனிது எழுந்தருளி அருளாட்சி புரிந்து வருகின்றனர்.

[குறிப்பு—மூன்ருவது ஆசார்யாள் முதல் ஒவ்வொருவர் திருநாமத்தின் பின்னும், 'இந்திர சரஸ்வதி' சுவாமிகள் என்பதனை இணைத்துக்கொள்ளவேண்டும்.]

## II கனகம் பல்கிய ஸ்ரீ காமகோடி பீடம்

தொண்டை மண்டலத்தில் பொன்மழை பொழியச் செய்தவள் அன்னை காமாக்ஷி. 'துண்டீராக்யே மஹதி விஷயே ஸ்வர்ண விருஷ்டி ப்ரதாத்ரி' என்பர் மூகசங்கரர். ஏழையொருத்தித் தந்த நெல்லிக்கனி கொண்டுவந்து அவ்வில்லத்தில் பொன்மழை பொழியச் செய்த அருளாளர் ஸ்ரீ ஆதிசங்கரர். 'கனகதாரா ஸ்த்வம்' அருளியவர் தம் திருமரபு அன்னையின் அருளால் பொன்னும் பொருளும் மன்னிய மரபாக நிலவியமையை வரலாறு காட்டுகின்றது.

### வேதநெறி வளர்த்த நாடு

பண்டைத்தமிழ் மன்னர்கள் அனைவரும் வேத வைதிக நெறி வளர்த்தவர்கள். சேரரும், சோழரும் பாண்டியரும் பல்லவரும் இன்னும் பிறபல சிற்றரசரும் யாகங்கள் புரிந்தமையும், வேதம் வல்ல அந்தணர்க்குப் பிரமதேயங்கள் அளித்தமையும், நான்மறை ஆறங்கம் வல்ல அந்தணர்க்குச் 'சதுர்வேதி மங்கலங்களை' அமைத்தளித்தமையையும் பல்லாயிரக் கணக்கான கல்வெட்டுக்கள் காட்டும். பல்யாக சாலை முதுமுடுமிப் பெருவழுதி 1 முதலாகத் தமிழக வேந்தரனைவரும் வேத நெறி புரந்தவரே யாவர். இம் மன்னரும் இந்தியத்தின் பிற பகுதியில் இருந்த மன்னர்களும் ஸ்ரீ காமகோடி பீடாதிபர்க்கு எண்ணில்லாக் காணிக்கைகளை அளித்தனர் ஆதல் கூடும். 2 அவற்றுள் இன்றுள்ளன சிலவேயாம்.

### காஷ்மீர் நாட்டவர் தந்த கனகப்பல்லக்கு

ஸ்ரீ காமகோடி பீடாதிபர் அருள்மரபில் 16வது ஜகத்குரு நாதர் ஸ்ரீ உஜ்வல சங்கரேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆவர். இவர்க்குப் பின் 17வது பீடாதிபதிகளாக இருந்தவர்கள் பாலகுரு ஸ்ரீ ஸதாசிவேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் ஆவர். இவர்கள் அருளாட்சிக் காலம் கி.பி.367 முதல் 375 வரையிலான எட்டாண்டு களாகும்.

1. கொற்கைக் கிழாஅன் நற்கொற்றன் கொண்டவேள்வி முற்று விக்கப் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி எனும் பாண்டியாதி ராஜனால்... நீரோடட்டிக் கொடுத்தமையால் — வேள்விகுடிச் செப்பேடு.

2. ஸ்ரீ சங்கராசாரியாரைத் தரிசிக்க மெக்கன்சியால் அனுப்பப்பட்ட பாபுராவ் என்பவர் 'ஸ்ரீ மடத்துக்குரியதானதும், ஒவ்வொன்றிலும் 5 அல்லது 6 இதழ்களையுடையதுமான சுமார் 125 செப்பேடுகளைத் தான் கும்பகோணத்தில் பார்த்ததாக எழுதியிருக்கிறார்... "1817 APRIL -10- HE TOOK ME INTO HIS AGRAHARAM AND SHOWED ME ABOUT 125 COPPER SASANAMS EACH CONTAINED IN FIVE OR SIX COPPER PLATES...." EXTRACTS FROM MACKENZIE COLLECTIONS – H.H. WILSON VOI II CALCUTTA 1828 PAGE 66. இவற்றுள் இன்றுள்ளன சுமார் 12 செப் பேடுகளேயாகும். மேற்படி அனைத்தும் பாதுகாப்புற்றிருப்பின் மிகப்பல செய்திகள் கிடைத்திருக்கும் எனலாம்.

ஜைன மதத்தவனுன 'தேவ மித்திரன்' என்பவன் அக்காலத்திய காஷ்மீர மன்னனுக்கு அமைச்சனுக இருந்தனன். இவனுடைய மகன் இளம் பருவத்திலேயே அத்வைதப் பற்று மிக்கவனாய் ஆசார்ய பக்தி பூண்டிருந்தனன். இதனைப் பொருத இவனுடைய தந்தை இவனை இரணியன் தன் மகன் பிரகலாத்னைக் கொடுமைப் படுத்திய வாறு போலத் துன்புறுத்தினன். இறுதியில் மகன் என்றும் பாராமல் அவனைச் சிந்து நதியில் தள்ளினன். நீரில் தத்தளித்து வாடிய சிறுவன், 'பூரிவசு' என்னும் பாடலிபுரத்து மறையவனால் காப்பாற்றப்பட்டனன். இச்சிறுவன் 'சிந்துதத்தன்' என்றும் பெயருடன் உஜ்வல சங்கரரிடம் ஒப்படைக்கப்பட்டனன். ஒப்படைக்கப்பட்ட சிறுவனை ஒப்பில்லாதவனுக்கினுர்; ஸ்ரீ பாலகுரு ஸதாசிவேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆக்கினுர். ஸ்ரீ பாலகுரு சுவாமிகட்குக் 'காஷ்மீர நாட்டுச் சிஷ்யர்கள் தங்கத்தலான பல்லக்கு' ஒன்று அளித்தனர். இவர் அப்பல்லக்கில் ஏறியமர்ந்து திக்விஜய யாத்திரைகள் செய்துவந்தார். தினந்தோறும் ஆயிரக்கணக்கான அந்தணர்களை உண்பித்தார். இறுதியில் திரியம்பகம் சென்று அங்குச் சித்தியுற்றனர்[1].

### போஜன் முத்துப்பல்லக்கு அளித்தல்

ஸ்ரீ காமகோடி பீடத்தின் 46ஆவது பீடாதிபதிகளாக இலங்கியவர்கள் ஜகத்குரு சாந்ரானந்த போதேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள் ஆவார். இவர் 1063 முதல் 1089 வரை அருளாட்சி செய்தவர். இவர்கட்டுத் தாரா என்ற உஜ்ஜைனி நாட்டு மன்னன் போஜன் என்பவன் முத்துப் பல்லக்கு ஒன்றினைக் காணிக்கையாக்கி வணங்கினன் என்பது வரலாற்றுட் கண்டது.[2]

### பிரதாபசிம்மன் அளித்த பொற்கொடை

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் குடந்தையில் வசிக்கத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தளித்த தஞ்சை மராட்டிய மன்னனுன பிரதாப சிம்மன் (1740-64) பூஜ்ய ஸ்ரீ ஜகத்குரு நான்காம் சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகட்கு (1746-1783) பொன்னாலும் வெள்ளியாலுமான மிகப்பல பாத்திரங்களை அளித்தான்; பொன்னுலான ஆபரணங்களை அளித்தான்; விலையுயர்ந்த சிம்மாசனம் நல்கினன். இச்செய்திகளை, "......RAJAH PRATAPSING BROUGHT THE SANKAR ACHARYA FROM KANCHI......GRANTED MOHINI LANDS OFFERED HIM HIS FIRST HONOUR AND RESPECT GAVE HIM A THRONE SILVER AND GOLD VESSELS AND JEWELS HORSES AND ELEPHENTS" என்னும் சரஸ்வதி மகால் ஆவணக்குறிப்பால் அறியலாம்.[3]

1. ஸ்ரீ சங்கர குருபரம்பரை - ஆத்ரேய கிருஷ்ணச் சாஸ்திரி. பக்கம்.57-58.

2. IBID. பக்கம். 75.

3. Vol. VIII BUNDLE 31. C P 36-40 60-1-6 த.ப.க. 4-74.

அள்ளித் தந்த அருளுள்ளம்

பாதகாணிக்கையாக — வருட நன்கொடையாக ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகட்குச் சமர்ப்பிக்கப்பட்ட பெரும் பொருளையும் தரப்பட்ட நில நிவந்தங்களையும் அளிக்கப்பட்ட பொன்னாலும் வெள்ளியாலும் ஆன பொருள்களையும் காத்தல் பணியில் இவ்வருளாளர்கள் ஈடு பட்டிலர் எனலாம். தரப்பட்ட கொடைகளுள் இன்றுள்ள சான்றுகள் அறிவிப்பனவற்றுள்ளும் ஒருசிலவற்றை மட்டுமே ஸ்ரீ மடம் காத்து வந்துள்ளது. வேண்டுதல் வேண்டாமை இலாத பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் ஸ்ரீ மடத்துக்குச் செல்வம் சேர்த்தலையும் காணிக்கையாக் கிடைத்த பொருளைக் காத்தலையும் ஒரு பொருட்டாகக் கருதாமல் இறைப் பணிகளில் ஈடுபடுதலில் பெரும் நாட்டமுற்று இலங்கினர் எனலாம்.

சான்றாகச் சில நிகழ்ச்சிகளை நோக்குவோம்.
பூஜ்யஸ்ரீ பரமாசார்யாளுக்குக் காளத்தி யரசரால் நவரத்னங்கள் பதிப்பிக் கப்பட்ட தங்கக் கிரீடமும் ஆந்திரப் பிரதேசத்து ஏலூரில் தங்கக் கிரீடமும் பக்தர்களால் சமர்ப்பிக்கப்பட்டன. இக்கிரீடங்களுள் ஒன்று 1984 இல் மறு உருப்பெற்றது. மாமன்னன் முதல் ராஜ ராஜ சோழனின் மணிமுடியை அலங்கரித்தது.

பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் அருளுளப் பாங்கின் வண்ணம் இராஜ ராஜனின் ஆயிரமாவது ஆண்டு விழாவில் மும்முடி சோழனுக்கு மீண்டுமோர் முடிசூட்டும் விழா நிகழ்வுற்றது. காஞ்சி ஸ்ரீ காம கோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீ மடம் சமஸ்த்தானத்தினரால் 'அழகிய சோழனுக்கு'ச் சூட்ட அருமையானதொரு கிரீடம் உருவாக்கப்பட்டது. நவமணிகள் பதிக்கப் பட்ட இப் பொற்கிரீடம் 253 கிராம் எடையினது. 49000 ரூபாய்க்கு மேல் விலை மதிப்புடையது. இக்கிரீடத்தைத் தஞ்சைப் பெரிய கோயிலினுள்ளே எழுந்தருளியுள்ளதும் ஸ்ரீ ராஜ ராஜன் எனப்படுவ துமான தொன்மையான திருவுருவுக்கு மறைந்த பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் 16.9.84 அன்று சூட்டினார்கள்

தவமுனிவருள் சர்வக்ஞராய பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் தமக்குச் சமர்ப்பிக்கப்பட்ட கிரீடத்தை 'இராஜசர்வக்ஞன்' எனக் கல்வெட்டுக் களில் புகழப்பட்ட முதல் ராஜராஜனுக்கு அளித்தனர். பரமாசார்யாள் கனகாபிஷேக காலங்களில் தமக்கு அபிஷேகிக்கப்பட்ட பொற்காசுகள் அனைத்தும் ஆலய திருப்பணிகட்கு அளித்து வந்தனர். இவை ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் தமக்குச் சமர்ப்பிக்கப்பட்ட விலையுயர்ந்த கொடைகளை இறைப்பணிகளிலும் கோயிற் பணிகளிலும் வேத சம்ரக்ஷண பணிகளிலும் செலவிட்டன ராதலைக் காட்டும் சான்றுகளுள் சிலவாகும். இவ்வருட்டிறம் விரிப்பிற் பெருகும்.

'ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும்' சமநிலைவரப்பெற்ற ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகள் தமக்கு உற்ற பொருளனைத்தும் உடனுக்குடன் அறப்பணிகளில் செலவிட்டனர் எனினும் அள்ளக் குறையாத அட்சய

பாத்திரமாய் மேலும் மேலும் ஸ்ரீ மடத்துக்கு வருவாய் பெருகிற்று. பண்டைய அரசரும் சமஸ்தானாதிபரும் ஸ்ரீமத் ஆசார்யாளைத் தரிசிக்கும் போதெல்லாம் பெரு நன்கொடைகளை ஸ்ரீ பாத காணிக்கையாக அளித்து அருள்வேண்டி நின்றனர். ஸ்ரீ காமகோடி பீடாதிபர் கட்கு சமர்ப்பிக்கப் பிக்கப்பட்ட கனக நன் கொடைகள் இரண்டு அடுத்தத் தலைப்புக்களில் கூறப்படும்.

# III அபுல்ஹஸன் அளித்த ஆடகப் பசும்பொன்

## 17-11-1677

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்துக்கு ஸ்ரீ சந்திர மவுலீச்வரர் பூஜை முதலானவற்றுக்காக ஒவ்வொரு ஆண்டும் 115 வராகன் பொன் தர ஆணை பிறப்பித்தான் ஒரு முகமதிய மன்னவன். இவன் கோல் கொண்டா சுல்தான் 'அபுல்ஹஸன் தனாஷா' என்பவனாவான்.

**அபுல் ஹாஸன் தனாஷா**

விஜய நகர சாம்ராஜ்யத்தொடு மாறுகொண்டு நிலவிய முகமதிய அரசுகளுள் கோல் கொண்டா அரசும் ஒன்றாகும். 'அப்துல்லா குதுப்ஷா' என்பவன் கி.பி. 11-2-1626 முதல் 1-6-1672 வரை கோல்கொண்டா சுல்தானாக இருந்தான். இவனுக்கு ஆண்மக்கள் இலர். மக்கள் மூவரும் பெண்கள். 1672-ல் இவன் இறந்தபின் மருமக்கள் அரசுரிமை காரணமாகத் தம்முள் போரிட்டனர். இவ் வுரிமைப்போர் மூத்த மருமகனை 'சய்யத் அகமது'க்கும் இளைய மருமகனை 'அபுல் ஹாஸன் தனாஷா'க்கும் இடையில் நடந்தது. வரலாற்றாசிரியன் ஃகாபி ஃகான் (KHAFI KHAN) குறிப்புக்கள் முன்னாள் அரசனின் அமைச்சன் 'முசாகான்' மற்றும் பல அரசியல் அலுவலர் தம் ஆதரவு அபுல்ஹாஸனுக்கு இருந்ததெனக் கூறும். அபுல் ஹாஸன் தனாஷா 1672-ல் கோல்கொண்டா சுல்தான் ஆனான்.[1]

**மன்னன் அளித்த செப்பேடு**

அபுல்ஹாஸன் தனாஷாவின் காலத்தில் காஞ்சி ஸ்ரீ காம கோடி பீடாதிபதிகள் உற்றிருந்த பெருஞ்சிறப்பினை இரு செப்பேடுகள் காட்டும். இவற்றுள் முதலாவது கி.பி. 1677க்கும்[2] இரண்டாவது 1688க்கும் உரியது.[3]

---

1. THE MELU PAKA FIRMAN OF ABUL HASAN TANA SHAH SULTAN OF GOLCONDA - 1088 AH. BY R. SUBRAH MANYAM M.A., Ph.D. Department of Archaeology. Book Let. page 4-5

2. The Epigraphist office Ootacamund was addressed regards the correct equivalent date and has supplied the 17th November 1677 AD Corresponding to Saka 1599 PINGALA MIRUGASIRA SUDDHA.

3. Copper plate Ins... the Sankaracharya of the Kamakoti Peeta No.10. EPIGRAPHIA INDICA Vol XIV pp 353-59.

இம்மேலுபாகா (மேல்பாக்கம்) பிர்மென் 8" அகலம் 11" நீளம் உடையதும் முறையே 83,91,80 தோலா எடை யுடையதுமான மூன்று ஏடுகளால் இயன்றது. இவ்வேடுகள் வளையமொன்றால் கோக்கப்பட்டுள்ளன. முதல் ஏட்டின் மேற் புறமும் மூன்ருவது ஏட்டின் பின்புறமும் எழுதப் பெறவில்லை. தெலுங்கு மற்றும் பர்சிய மொழிப் பகுதிகளால் இயன்ற இச்செப்பேட்டின் அனைத்துப் பகுதிகளும் தெலுங்கு மொழி எழுத்துகளில் எழுதப்பட்டுள்ளன.

வரலாற்று முக்கியத்துவம் உடைய மொழி நடையுடைய[1] இத் தாமிரசாசனத்தை COPPER PLATE INSCRIPTIONS BELONGING TO THE SANKARACHAARYA OF THE KAMAKOTI - PITHA என்னும் நூலின் 9ஆவது செப்பேடாகத் திருவாங்கூர் மாநிலத் தொல்லியல் துறை சூப்பிரன்டென்டண்ட் ஆக இருந்த T.A. கோபிநாதராவ் அவர்கள் 1916-இல் பதிப்பித்தனர். இதனுள் இவர் செப்பேட்டின் காலம் 1710 என்பர்.

இதே தாமிரசாசனம் டாக்டர். R. சுப்பிரமணியம் அவர்களால் விரிவான விளக்கவுரையுடன் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. இச் சாசனம் முகமதிய ஆண்டு 1088 ஆம் ஆண்டு (SHAUVAL) மீ முதல் நாளுக்குரியது என்றுள்ளது. இது கிறித்துவ ஆண்டு 1677 நவம்பர் மீ 17 ஆம் நாளாகும் என்று டாக்டர் R. சுப்பிர மணியம் கூறுவர்.[1]

### செப்பேட்டில் கனகக்கொடை

கோல்கொண்டா சுல்தான் அபுல்ஹாஸன் தனாஷா 'மேல் பாக்கம்' என்னும் கிராம நிலவரி வருவாயில் இருந்து ஒவ்வொரு ஆண்டும் 115 வராகன் பொன் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகட்கு அளிக்க வேண்டும் என நிவந்தம் நல்கினன் இப்பொன் ஸ்ரீ காமகோடி பீடாதிபர் ஸ்ரீ சந்திர மவுலீச்வரர்க்குத் ஆற்றும் தீபாராதனை, நித்ய நைவேத்யம் முதலான செலவுகட்காக அளிக்கப்

1. சமகாலத்திய ஆவணங்களொடு இச் செப்பேட்டுக்குள்ள ஒப்புமை களைச் சுட்டி இதன் மெய்ம்மைசுட்டித் தலையான சான்றாதலைக் காட்டுவர் ஆய்வறிஞர். THE MELUPAKA FIRMEN - Page 1.
2. LATE SRI GOPINATH RAO CALCULATED THE DATE OF THE GRANT AS 1710 AD SINCE THE MUHAMMADAN ERA CALLED THE HIJRIERA is Dated From Friday the 16th July 622 AD. Which is dated of the flight of the Holy Prophet from Madina to Mecca......... The date of the present grant if worked out correctly making allowance for the strict by human nature of the western calendar would Correspond to 17th November 1677 AD. - page 8. The Melupaka firmen. DR. R. Subrahmanyam M.A., Ph.D.

1. திரு. M. சுப்பிரமணியன் என்னும் ஆய்வறிஞரும் Dr. R. சுப்பிர மணியம் அவர்கள் கருத்தினைத் தழுவுவர். The Melpaka Firman of Abul Hasan Tana Shah Sultan of Golconda - 1088 AH. Booklet - Dr. R. Subrahmanyam. p 8.

பட்டதென்பது செப்பேட்டில் கண்டது. அக்காலத்து ஸ்ரீ காமகோடி பீடாதிபராக இருந்தவர்கள் 59-ஆவது பீடாதிபதிகளாகிய ஜகத்குரு பகவந்நாம போதேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆவர்கள். இவர்கள் *1638* முதல் *1692* வரை அருளாட்சி நடத்தியவர்கள். இவர் மூன்றும் போதர் எனவும் யோகேந்திரர் எனவும் குறிக்கப்படுவர்.

ஸ்ரீ போதேந்திரர் காஞ்சி மண்டன மிச்சிரர் அக்ரஹாரத்தில் திருவவதாரம் செய்தவர். கேசவ பாண்டுரங்கன் என்பார் திருமகனுர். புருஷோத்தமன் என்பது பூர்வாச்ரம நாமதேயம். பக்தி இயக்கத்தையும் குறிப்பாகப் பகவந் நாமஸ்மரணேயையும் தம் 'நாமம்ருத ரசாயனம்', 'நாமம்ருத ரசோதயம்' முதலான 'நூல்களால் வளர்த்தவர். சமகாலச் சான்ருேரான ஸ்ரீதரவெங்கடேசர் (அய்யாவாள்) மருதாநல்லூர் சுவாமிகள் முதலியோரால் பெரிதும் கவரப்பட்டுப்போற்றப்பட்டவர். இவர் காட்டிய நெறியே தென்னகத்துப் பஜனே இயக்கத்துக்கு முன்னேடியாயிற்று[1] இவர்கள் ஜம்புகேச்வரத்து அகிலாண்டேச்வரிக்குத் தாடங்கப் பிரதிஷ்டை ஆற்றினர். ஸ்ரீ இராமேச்வரம் வரை யாத்திரைகள் மேற்கொண்டவர். காஞ்சி திரும்புங்கால் இடைவழியில் ஆடுதுறைக் அருகில் உள்ள கோவிந்தபுரத்தில் சித்திபெற்றனர்.

ஸ்ரீ மடம் பிருதாவளி

அபுல்ஹாஸன் தனாஷா மேலே குறிப்பிட்ட ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளே இச்செப்பேட்டில்,

ஸ்ரீமத் அகில பூமண்டலாலம் கார த்ரியஸ்திரிம் ஸத்கோடி தேவதா சேவித ஸ்ரீ காமாக்ஷி தேவிசநாத ஸ்ரீமத் ஏகாம்பரநாத சாக்ஷாத்கார பரமாதிஷ்டான க்ரதாதி சதுர்யுக சகல தர்மிக ராஜ பாலித சகலவேத சாஸ்த்ர முலபுத சத்யவ்ரத நாமாங்கித காஞ்சி திவ்யக்ஷேத்ரே

சாரதா மட சமஸ்தித

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ சங்கராசார்ய பூஜித சந்திர மவுலீச்வர சுவாமிகி என்று குறிக்கிருன்.[2] இதனுள் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தில் இன்று வழங்கும் பிரசஸ்தி பகுதியுடன் பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் குறிக்கப்பட்டுள்ளனர் என்பது அறிதற்பாலது.

---

1. பகவன் நாம சாம்ராஜ்ய லக்ஷ்மீ ஸர்வஸ்வ விக்ரஹம் I
ஸ்ரீமத் போதேந்ரயோகீந்ர தேசிகேந்திர முபாஸ்மஹே II என்றும்
யஸ்யஸ்மரண மாத்ரேண நாமபக்தி: ப்ரஜாயதே I
தன்னமாமி யதிஸ்ரேஷ்டம் போதேந்ர ஜகதாம் குரும் II என்றும்
பஜனேகளின் தொடக்கத்துப் பூஜ்ய ஸ்ரீ பெரியவாளைத் துதிக்கும் வழக்கா றுண்மை அறிதற்பாலதாகும்.

2. இரண்டாம் ஏடு இரண்டாம் பக்கம். *2* ஆம்வரி முதல் *13* முடிய. சாசனவரி *29* முதல். C.P. INS. P. 118-19.

கி.பி. 1677ல் சுல்தானால் நிலவரி வருவாயில் இருந்து 115 வராகன் அளிக்க உத்தரவிடப்பட்ட இம்மேல் பாக்கம் 1688-ல் ஸ்ரீ மடத்துக்கே சர்வமான்யமாக அளிக்கப்பட்டது.[1] இவ்வூர் 'தென் மேல்பாக்கம்' என அறிஞர் கருதுவர்.[2] இந்நாளிலும் ஸ்ரீ மடத்தின் அனுபவ பாத்யதையில் உள்ளது.

1. *சகசம்வத்சரம் 1608க்குரிய சாசனம்.* IBID NO. 10. Page 125-138 also the Eprgrphia Indica. Vol XIV pp 353-9.
2. The Melupaka Firman of Abul Hasan Tana Shah. Sultan of Golconda: 1088 A.H. - R. Subramanyam. p-9. The Sankaracharya Math NS.T.A.G. *பக்.115.*

# IV. வியாச பூஜைக்கு 3 1/2 கிலோ பொன் -1747.

தஞ்சை மராட்டிய மன்னன் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் நிகழ்த்தும் ஸ்ரீ சந்திரமவுலீச்வர சுவாமி பூஜைக்காக ஆண்டுதொறும் 3000 சக்கரம அளிக்க அரசாணை பிறப்பித்தான். 3000 சக்கரத்துக்குப் பொன் மதிப்பு எவ்வளவு தெரியுமா? அக்காலத்தில் 1 தோலா பொன் விலை 10 சக்கரம். 3 தோலா 1 பலம். எனவே 100 பலம் அல்லது 3.5 கிலோ பொன் 3000 சக்கரம். இவன் பெருமதிப்புடைய 3000 பொற்காசுகளை அளிக்க ஏற்பாடு செய்த விவரத்தை ஆவணங்களின் வழியாக அறிவோம்.

**தஞ்சை மன்னரும் ஸ்ரீ காமகோடி பீடமும்.**

தஞ்சை மராட்டிய அரசர்கள், காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர் மாட்டுக் குருபக்தியுடையராய் இலங்கியவர்.[1] தம்முன்னோர் போலவே ஸ்ரீமத் ஆசார்யாள் மாட்டுப் பெரும் பக்தியுடையனாகிய பிரதாபசிம்மன், காஞ்சியில் இருந்து வருங்கால் இடையில் உடையார்ப் பாளைத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் ஆசார்யாளைச் சோழ மண்டலத்திற்கு வரவேற்று எழுந்தருள்வித்தவன்; குடந்தை ஸ்ரீ மடத்தில் இனிது உறையச் செய்தவன்.

**பிரதாபசிம்மன் சன்னத்துகள்.**

தஞ்சை யரசர்கள் பிறப்பிக்கும் அரசாணை (Royal Order) கள் சன்னத்து (Sannad) எனப்பெறும். பிரதாபசிம்மன் காஞ்சி

---

[1] தஞ்சை மராட்டிய மன்னனாக 1731-37-ல் இருந்தவன் முதல் துளஜா ஆவான். இவர் காலத்தில் 61-ஆவது பீடாதிபராய மூன்றும் மஹாதேவேந்திரர் (1704-46) இருந்தனர். முதல் துளஜா, இவர் காலத்தில் (1539-86-ல் 57ஆவது பீடாதிபராக இலங்கியவரும் திருவெண்காட்டில் சித்தியடைந்தவருமாய) இரண்டாம் பரம சிவேந்திரர் அதிஷ்டானம்-கோயிற்கு நிலக்கொடை அளித்து 1732-இல் 5 சன்னதுகள் பிறப்பித்தனன். இவை 1743-ல் பிரதாப சிம்மனால் உறுதி செய்யப்பட்டன. (தொடர்ச்சி-அடுத்தபக்கம்)

ஸ்ரீ காமகோடி பீடம் 62 ஆவது ஆசார்யரான ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்குக் கி. பி. 1747- இல் ஒன்றும் 1750-இல் மூன்றும் ஆக நான்கு சன்னத்துகளைப் பிறப்பித்துள்ளான். இவை மாராட்டிய மொழியின; நாணுபன்ட் என்னும் வகை மோடி எழுதியலமைதியுடையன. இவை இம்மன்னன் அளித்துள்ள கொடைச் செய்தி கூறுவதுடன் ஸ்ரீ மடத்தின் பெருமையையும் தொன்மையையும் புலப்படுத்துவனவாகும்.

ஸ்ரீமத் ஆசார்யாள் திருநாமம்.

பிரதாபசிம்மன் காலத்தில் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளாக இருந்தவர்கள் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் IV அவர்கள் ஆவர். இவரை ஷெ சன்னத்துக்கள்,

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யாணும் அதிஷ்டானே சிம்மாசன அபிஷிக்தாணும் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதிநாம்

---

(தொடர்ச்சி)

| ஆண்டு | அரசன் | கொடை தந்தோர் | தரப்பட்டவர் |
|---|---|---|---|
| 1677 | கோல் கொண்டா | அபுல்ஹாசன் தனுஷா | காஞ்சி க்ஷேத்திரத்து சங்கராசார்யர் |
| 1687 | — | காஞ்சி க்ஷேத்ரம் ஸ்ரீ மடத்து ஸ்ரீ மஹா தேவேந்ரர் | ஸ்ரீ ராமா சாஸ்த்ரி |
| 1710 | ஸ்ரீ வெங்கட தேவர் | விஜய ரங்க சொக்க நாதன் | லோககுரு சங்கராசார்ய ஸ்வாமி |
| 1742 | ஸ்ரீ ரங்க தேவர் | விஜய ரகுநாத ராய தொண்டமான் | பவனி, வெங்கட கிருஷ்ணய்யர் |
| 1747 | — | தஞ்சை துளஜா ராஜா | ஸ்ரீ சங்கராசார்யர் |
| 1783 | — | விஜய ரகுநாத பெரிய உடையார் | காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் ஸ்ரீ மஹாபகவத் பாதாசார்ய சுவாமி. |

The Melu paka firman—R. Subramanyam, book-let, pp 23-4

பூஜ்யோ ஸ்ரீ பாதயோஹ்' என்று குறிக்கின்றன.[1] ஆதிசங்கரர் அருள் முதல்வராக ஆற்றொழுக்காய் வந்த தவமரபினர்களாகிய ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளை மரபுநெறி மாறாது, மன்னன் குறித்துள்ள திறம் அறிந்தின்புறற்பாலது.

ஸ்ரீ மடத்துப் பிருதாவளி

"காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபர்கள் ஆதிசங்கரர் கண்ட சர்வக்ஞ பீடத்தினர்; அவர் அருள் மரபினர்; ஸ்ரீ சாரதாமடத்தினர்; ஸ்ரீசக்ர பிரதிஷ்டாபகர்கள்; வேத வேதாந்த மார்க்கத்தினர்" முதலான தம் பெருமைகளையும் தொன்மைகளையும் விளக்குவது காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தின் பிருதாவளி. இப் பிருதாவளி மாற்றம் ஏதுமின்றி இன்றுள்ளது போலவே பன்னூறாண்டுகளாக வழங்கிவருவதனைக் கி. பி. 1677 க்குரிய அபுல்ஹஸன் தனாஷா செப்பேட்டாலும்[2], 1687-க்குரிய மற்றொரு மேல் பாக்கம் செப்பேட்டாலும்[3] அறியலாம். இவை முகமதிய அரசரால் அளிக்கப்பட்ட செப்பேடுகள். ஸ்ரீமடம் பிருதாவளி இந்து மன்னனான பிரதாபசிம்மன் கி. பி. 1747-இல் அளித்த சன்னத்தில் இன்று வழக்கில் உள்ளதை ஒப்பத் தெளிவுற எழுதப்பட்டுள்ளது. ஷை சன்னத்தில் கண்ட பிருதாவளி—

[அடைப்புக் குறியில் உள்ளது இந்நாளில் வழங்குவது]

ஸ்வஸ்தி

ஸ்ரீமத் ஸகல (அகில) பூமண்டலாலங்கார
த்ரயஸ் த்ரிம்சத் கோடி தேவதா ஸேவித
ஸ்ரீகாமாக்ஷி தேவி ஸநாத
[ஸ்ரீமத் ஏகாம்ர நாத ஸ்ரீ மகாதேவி ஸநாத
ஸ்ரீ ஹஸ்தி கிரி நாத[4]]
ஸாக்ஷாத்கார பரமாதிஷ்டான ஸத்ய வ்ரத நாமாங்கித
காஞ்சி திவ்ய க்ஷேத்ரே
சாரதா மட ஸுஸ்திதானாம்
அதுல (அதுலித) ஸுதாரஸ மாதுர்ய
கமலாஸன காமினீ

---

[1] Precptors of advaidha.—page. no. 409

[2] Cp. Ins-Belonging to the Sankaracharya of the Kamakoti Pitha Gopinatha Rao-Page 114.

[3] Ibid., 10 also see Epigraphia Indica Vol. XIV, pp. 350-9.

[4] இப்பகுதி சன்னத்தில் இல்லை. பின்னர் கி. பி. 1807 இலேயே ஆவணங்களில் உள்ளது.

தம்மில்ல ஸம்புல்ல மல்லிகா மாலிகா நிஷ்யந்த மகரந்தஜரீ துரந்தர (ஸெவஸ்திக) வாங்நி கும்ப விஜ்ருமான ஆனந்த துந்தி லித மனீஷி மண்டலானாம்

அனவ்ரதாத்வைத வித்யாவிநோத ரஸிகாஹும் நிரந்தர அலங்க்ருதீக்ருத

சாந்தி தாந்தி பூம்னும் ஸகலபுவன பிரதிஷ்டாபக ஸ்ரீசக்ர பிரதிஷ்டா விக்யாத யசோ அலங்ருதானாம்

நிகில பாஷாண்ட ஷண்ட கண்ட கோத் காடனேன
வேத வேதாநத மார்க்க ஷண்மத பிரதிஷ்டாபக ஆச்சார்யாணும்
ஸ்ரீமத் பரம ஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய
ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யாணும்

அதிஷ்டானே சிம்ஹாஸ்னே(நா)அபிஷிக்தானாம் (அபிஷிக்த)" என்றுள்ளது. மிகப்பல வரலாராய்வறிஞர்களால் பரிசோதிக்கப்பட்டதும் மூலாதாரங்களாகப் பதிப்புகள் உற்றதும் பழைய ஆவணங்களுள் உள்ளதுமான பிரஸஸ்தி வடிவங்களுள் இது,

1. முன்னுள்ள இருவடிவங்களோடு ஒப்புமை யுடையது.

2. எல்லாச் சன்னத்துகளிலும் உள்ளது.

3. பின்னைய ஆவணச் சான்று (1807) களாலும் உறுதி செய்யப் பெறுவது.[1]

4. இந்நாளில் ஸ்ரீமடத்து வழங்கும் வடிவத்தொடு மிகவும் நெருங்கிய ஒப்புமை உடையது.

---

[1] கி. பி. 1807-இல் பச்சையப்ப முதலியாரின் மனைவி தைலம்மாள் திருவிடைமருதூரில் அளித்த மனைதான சாசனத்தில் இந்நாளைய வடிவம் முழுமையாக உள்ளது. "........அதிஷ்டானே சிம்மாசனுபிக்ஷிக்த ஸ்ரீமது சந்திர சேகரேந்திர சரஸ்வதி சம்மியமிந்ராணும் அந்தே வாசிவரிய ஸ்ரீமது மஹாதேவேந்திர சரஸ்வதி சம்பூஜிதா ......." என்றுள்ளமை அறிதற்பாலது.

5. காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர் 'ஸ்ரீசக்ர பிரதிஷ்டாசார்யர்' முதலான மிகப்பல விருதுகளைப் பெற்றிருந்த தொன்மையைக் காட்டுவது.

என்னும் செய்திகள் அறிதற் பாலனவாகும்.

பிரதாபசிம்மன் பிறப்பித்த ஆணை

பிரதாபசிம்மன் "ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீ சந்திர மௌலீச்வர சுவாமி பூஜை நடத்தவும் வியாச பூர்ணிமைக்காகவும் ஸ்ரீ மடத்துக்குப் பெரும் பொருள் கிடைக்க ஏற்பாடு செய்து" ஆணை பிறப்பித்தான். இவ்வாணையின்படி சஹூர்சூன் ஆண்டு 1148-இல்[1] (கி. பி. 1747-இல்) சன்னத் ஒன்று[2] பிறப்பிக்கப்பட்டது

"சோழ மண்டலத்தில் உள்ள நால்வகை வருணத்தாருள், ஸ்ரீ ராமானுஜருடைய நெறியினைப் பின்பற்றும் வைணவரும் ஸ்ரீமாத்வருடைய நெறியினராகிய வீரமாதவரும் நீங்கலாக உள்ள பிராமணர் க்ஷத்ரியர் வைசியர் சூத்திரர் என்னும் நான்கு பிரிவினைச் சேர்ந்த ஹிந்துக்கள் அனைவரும் ஸ்ரீமத் ஆசார்யாள் ஸ்ரீ சந்திரமௌலீச்வர பூஜை நிகழ்த்தப் பொருளளிக்க உத்தரவிட்டான்.

1. இவ்வுத்தரவின்படி பிரபவ வருடம் முதலாக ஆண்டு ஒன்றுக்கு ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு பணம் என்ற விகிதத்திலும்,

2. அவரவர் தம் இல்லங்களில் நடக்கும் திருமணவைபவத்துக்கு இரண்டு பணம் என்ற விகிதத்திலும்,

3. உபநயன நிகழ்ச்சிக்கு ஒரு பணம் என்ற விகிதத்திலும்,

4. ஏனைய எல்லாச் சுப காரியங்களுக்கும் ஒரு பணம் என்ற விகிதத்திலும்,

சோழமண்டலத்துள்ளாரனைவரும் செலுத்தவேண்டும்" என்பது இவ்வுத்தரவில் கண்டது. இதனை உடன் பதிவு செய்து கொண்டு அரண்மனை அதிகாரிகள் அமுலாக்கினர்! இதில் கண்ட பணம், சக்கரம் என்னும் பொற்காசின் பத்தில் ஒரு பங்காகும்.

---

[1] சகர்சூன் ஆண்டுடன் 599-ஐக் கூட்டின் கிறித்துவ ஆண்டு வரும்.

[2] MADRAS CENTRAL RECORD OFFICE. RC NO. -C 37/38-43.

## காப்புரையில் கண்ட உண்மை

காப்புரை என்பது சாசனங்களின் இறுதியில் அமையும் பகுதியாகும். இப்பகுதியில்.

" இத்தன்மம் காக்கப் பெறுக " எனவும்

"இதனைச் செயலாக்கியவர் இன்ன நன்மை அடைவர்" எனவும்

" செயலாக்காதவர் இன்ன துன்பம் உறுவர்" எனவும் கூறுப்பெறும்.

ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் 'ஜகத்குரு' எனப்'பெற்றமைக்குப் பழைய செப்பேட்டாதாரங்கள் உண்டு. கி. பி. 1710 - இலேயே 'லோக குரு ஸ்வாமி' எனப் பெற்ற[1] ஸ்ரீமத் ஆசார்யாள், நால்வகை வருணத்தார்க்கும் குருநாதராதலை இச்சன்னத்தில் உள்ள காப்புரை காட்டும். காப்புரையில்,

"தன்னுடைய இவ்வுத்தரவை மறுத்தவர் அரசாணைக்குக் கீழ்ப் படியாத குற்றத்துக்குரிய தண்டணைக்கும் குருநாதர் ஆணையை மறுத்த பாவத்திற்கும் உரியவராவார்"

என்றுள்ளது. வியாச பூஜைக்குத் தொகை செலுத்தாதவர் 'தம் குருநாதராணையை மறுத்தவர்' எனப்பட்டிருந்தல் நோக்கற் பாலது. தஞ்சை மன்னனுக்கும் சோழ மண்டலத்தாரனை வருக்கும் காஞ்சி ஸ்ரீமத் ஆசார்யாளே குருநாதராதலை இக்காப் புரை காட்டுகிறது.

## மன்னன் செய்த மாற்று ஏற்பாடு

பிரதாபசிம்மன் 1747-இல் பிறப்பித்த இவ்வாணையை நடை முறைப்படுத்துவதில் சில சிக்கல்கள் இருந்தன. ஒன்று வருடந் தொறும் வீட்டுக்கொரு பணம் பெறல்; இரண்டு சுபகாரியம் நடக்கும் போதெல்லாம் உரிய சந்திரமவுலீச்வர சம்பாவனையைப் பெறுதல்; மூன்று உரிய கணக்குகளுடன் அவற்றை ஸ்ரீமடத்துக்

---

[1] ... லோக குரு சுவாமுலைன ஸ்ரீமத் சங்கராசார்ய சுவாமுல வாரிகி ....'' விஜய ரங்க சொக்கநாதன் செப்பேடு—வரி 18-19 CP INS Belonging to the Sankaracharya Math. Page 107.

குச் சமர்ப்பித்தல் முதலிய பணிகளை அரசலுவலர் மேற்கொள்ள வேண்டிவந்தது.[1]

கி.பி. 1747 - உத்தரவு 1750-இல் மன்னனால் ரத்து செய்யப் பட்டது. முன்னைய உத்தரவு சரிவர இயங்காமையின் புது உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. முன்னுத்தரவில் உள்ளனவற்றுள் வீட்டுக்கொரு பணம் தர வேண்டும் என்பது மீண்டும் இதனுள் வற்புறுத்தப் பட்டது.[2]

"சர்க்கார் சந்திரமௌளீச்வர பூஜைக்காக வியாச பூர்ணிமை தோறும் தொகை தருவது தொடரப்பட வேண்டும் என்று கருது கிறது. இந்த ஏற்பாடு இடைவிடாமல் தொடர்தற் பொருட்டுத் 'தூய்மையான பக்தி காரணமாக'ச்சர்க்கார் வியாச பூர்ணிமை தொறும் ஆண்டொன்றுக்கு 3000 சக்கரம் தர நிச்சயித்தது. 1750 முதல் இது நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

---

[1] இதற்கு முன்னமேயே தமிழக மெங்கும் விளைநில வருவாயின் ஒருபகுதி நில உரிமையாளரிடமிருந்து பெறப்பட்டு அரசலுவலர் மூலமாக ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீமடத்துக்கு நல்கப் பட்டுள்ளது.

ஸ்ரீ ஏகாம்பரநாதருக்குப் பெரிய உடையார் மேரையும் ஸ்ரீ காமகோடி பீடத்துக்குச் சிக்க உடையார் மேரையும் மிகப் பழங் காலந்தொட்டு அளிக்கப்பட்டுள்ளது. இவ் வருவாய் முகம்மதிய அரசராலும் பின்னையோராலும் அமலாக்கப்பட்டது. வெள்ளையர் காலத்துத் தாம் வசூலிப்பதில் தாமத மேற்படினும் மொத்த கண்டுமுதலில் கலத்துக்கு உரி என்ற கணக்கில் அந்த அந்தப் பசலியிலேயே ஸ்ரீமடத்துக்கு அளித்து உரிய வவுச்சர் பெற்றனர். இச் செய்திகளை மிகப் பல அரசு உத்தரவுகள் மற்றும் நீதி மற்றத்தீர்ப்புக்களால் அறியலாகும். விவரங்கட்கு காமகோடி மாத இதழ் கும்பகோணம் Vol. No. 8. தீபாவளி விசேஷ அனுபந்தம். சித்ரபானு ஐப்பசி 18௳ செவ்வாய் பக்கம் 12-84. பழங்காலத்தில் 1. சிக்க உடையார் மேரை 2. தஞ்சை அரசர் ஆண்டு நன்கொடை. 3. ஸ்ரீசந்திரமவுலீச்வர சம்பாவனை முதலான வருவாய்களை உடையதாக ஸ்ரீ மடம் இருந்தமை அறியத்தக்கதொன்று.

[2] 'வீட்டுக் கொரு பணம்' என்பது சுலபமாகக் கணக்கிட்டு வருடம் ஒரு முறை வசூலித்தல் எளிது. எனவே இவ்வொன்று மட்டும் அரசலுவலர் மூலம் பெறப்பட இச்சன்னது வழி கோலிற்று.

சர்க்கார் 3000 சக்கரம் தரத் தீர்மானத்துப் பின்னர் வீட்டுக்கொரு பணம் என்ற விகிதத்தில் அதனை மக்களிடமிருந்து பெற்று ஈடு செய்து கொள்ளும் எண்ணம் கொண்டது. டிவிஷன் வாரியாக வீட்டுவரி பெறப்பட்டு அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய தொகை பற்றித் தனித்தனிச் சன்னத்துக்கள் பிறப்பிக்கப் பட்டன. மூன்று சன்னத்துக்கள் இந்நாளில் உள்ளன,[1]

முதல் சன்னத் 'பேரளம்' டிவிஷனில் இருந்து 500 சக்கரம் அதிகாரிகளால் வசூலித்துச் செலுத்தப்பட வேண்டும் என்கிறது.

இரண்டாவது சன்னத் 'மாயூரம்' டிவிஷனில் இருந்து 500 சக்கரம் வசூலிக்கப் பெற வேண்டும் எனவும் அத்தொகை அந்த டிவிஷனில் உள்ள,

| | | | |
|---|---|---|---|
| மாயூரம் | தாலுகா | 75 | சக்கரம் |
| பட்டமங்கலம் | . | 125 | ,, |
| கோமல் பத்து | ,, | 150 | ,, |
| கொரநாடு | ,, | 150 | ,, |

என்னும் விகிதத்தில் பெறப்பட வேண்டுமென்றும் கூறுகிறது.

மூன்றாவது சன்னத் மன்னார்குடி டிவிஷனில் இருந்து 500 சககரம் வசூலிக்கப்பட வேண்டும் என்கிறது.

இவ்வேற்பாடு வியாச பூர்ணிமைக்களிக்கப்படும் தொகையான 3000 சக்கரம் அவ்வவ்வாண்டிலேயே ஸ்ரீ மடத்துக் களிக்கப்பட வேண்டும் என்னும் நோக்குடன் செய்விக்கப் பட்ட மாற்று ஏற்பாடாகும் எனலாம்.

---

[1] "3000 சக்கரத்துக்கும், தனித்தனியே சன்னத்துக்கள் பிறப்பிக்கப் பட்டிருக்குமாயினும் 1500 சக்கரம் எவ்வாறு பெறப்படவேண்டும் எனக்காட்டும் 3 சன்னதுக்களே இந்நாளில் ஸ்ரீமடத்தில் உள. இவை ஸ்ரீ மடம் ரிக்கார்டுகளில் உள்ளன. ஒவ்வொன்றினுள்ளும் 1747 - சன்னத் விவரமும் மாற்று ஏற்பாட்டு முறையும் கூறப்பட்டுள்ளன. ஏனைய 1500 சக்கரம் பற்றியும் மூன்று சன்னதுகள் பிறப்பிக்கப் பட்டிருக்கும் என்பது உறுதி.

பிரதாபசிம்மன் தன் முன்னைய சன்னத்தில் சுப காரியங்கள் செய்யுங்கால் ஸ்ரீசந்திரமௌளீச்வர சம்பாவனைத் தொகை பெற்று ஒப்படைக்கும் பணியினை அரசியல் அதிகாரிகட்கு அளித்திருந்தமை தவிர்க்கப்பட்டது. சுபகாரியம் புரிவோர் தாமே ஒப்படைக்கும் பழைய முறையே தொடர்ந்தது.

### ஆவணங்கள் காட்டும் உண்மை

"பிரதாபசிம்மன் காலத்தில் இருந்தே ஸ்ரீ சங்கராசார்யாருடைய மடத்துக்குச் சந்திரமவுலீச்வர பூஜைக்கு மராட்டிய அரசர் பெருந்தொகைகள் அளித்து வந்தனர் ஆதல் கூடும்.

கி. பி. 1768 —இல் சக்கரம் 1000 + 2000

,, 1780 —இல் மொயின் 4500 சக்கரம்

ஆஷாட சுத்த பூர்ணிமா வியாச பூஜைக்கு 500 சக்கரம்

,, 1786 —இல் மொயின் 4600 சக்கரம்

,, 1787 —இல் சக்கரம் 4500

,, 1794 —இல் 4624 சக்கரம்

,, 1798 —இல் 4625 சக்கரம்

இக் குறிப்புக்களால் 1798 வரை நித்ய பூஜைக்காகவும் வியாச பூஜைக்காகவும் 4625 சக்கரம் ஆண்டுதோறும் ஸ்ரீ சங்கராசார்ய மடத்துக்குத் தஞ்சை மன்னரால் கொடுக்கப்பட்டிருக்கூடும் என அறியலாம். இதற்குப் பின் கொடுக்கப்பட்டதோ இல்லையோ தெரியவில்லை" என மராட்டிய வரலாற்றுய்வாளர் கருதுவர்[1] இதனால் கி. பி. 1747 முதல் ஸ்ரீ காமகோடி பீடத்துக்கு ஆண்டு தோறும் தஞ்சை யரசரால் மொயின் சக்கரம் அளிக்கப்பட்டமை பெறப்படும்,

---

[1] தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறும் சமுதாய நிலையும்- பேராசிரியர் கா. ம, வேங்கட ராமையா, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம். பக்கம் 432.

# V கனகாபிஷேக வரலாறும் மஹத்துவமும்

கனகம் - பொன். 'நற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன்காண்' என்பது தேவாரம்; கனகம் விலை மதிப்புமிக்கதொரு பொருள்; தன் ஒளியால் - தன்மையால் பூசனையில் பேரிடம் பெறும் பொருள். அருச்சனையில் கனகம் இடம் பெற்ற முறை அபிஷேகத்தில் கனகம் இடம் பெற்ற நெறி கனகாபிஷேகம் பற்றிய குறிப்புகள் முதலானவை அறிதற்பாலன.

*அருச்சனையில் பொன்மலர்*

உலகங்கள் ஏழனுள் அழகும் வளமும் மிக்கது தேவலோகம்; விண்ணாடு. அங்குள்ள பொருள்கள் யாவும் பொன்மயமானவை. எனவே அந்நாடு பொன்னாடு எனப் போற்றப்படுவது. தேவலோகத்துள்ள மரமும் பொன்; மலரும் பொன். அங்குள்ள கற்பகமலர் பொன்மலர்.

இன்றளிர்க் கற்பக நறுந்தேன்
இடை துளிர்க்கும் நிழலிருக்கை

என்பது போலக் கவிஞர் பாடியுள்ளன எல்லாம் மண்ணுலக மலரியல்பை விண்ணக மலர்கட்கு ஏற்றிப் பாடிய கவிதைப் பாங்கே யாகும். அகப்பொருள் இலக்கண உரையாளர், 'வாடாமை' தேவ உலக மலரியல்பு என்று கூறியுள்ள பகுதிகள் விண்ணாட்டு மலர்கள் பொன்மலர்களாதலைப் புகலும்.

விண்ணுலத்துள்ள தேவர்களும் தேவர்கோன் இந்திரனும் இறைவனைத் தொழும் இயல்பினர். 'இமையா நாட்டத்து இமையவர்' இறைவனைப் பரவுங்கால் பொன் மலர் கொண்டு போற்றுதல் இயல்பேயன்றோ?

*பூவுலகில் பொன்மலர்*

பூவுலகிலும் இறைவன் அருளால் பொன்மலர்கள் தோன்றி அவற்றால் இறைவனைத் தேவர்கள் வழிபடுவதுண்டு. இச்செய்தியைத் திருவிளையாடற் புராணம் விளக்கும். 'தன் பிரம்மஹத்தி தோஷம் நீங்குதற் பொருட்டு மதுரைச் சொக்கேசரை வழிபட எண்ணிய இந்திரன், மலர்களைத் தேடினன்; தன் மனத்துக்கேற்ற மலர்கள் கிடைக்கப் பெறாமையால் மனம்சோர்ந்தான். அப்போது சிவபெருமான் திருவருளினாலே மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் இருந்த தீர்த்தத்தில் பொற்றாமரை மலர்கள் மலர்ந்திருத்தலைக் கண்டான். பொன் தாமரை மலர் மலர்ந்தமையால் அக்குளத்துக்குப் 'பொற்றாமரை பொய்கை' என்று பெயரிட்டான். அத்தீர்த்தத்து நீராடிப் பொன் தாமரை மலர்களைப் பறித்தெடுத்து ஆலவாய்ச் சொக்கலிங்கரை இந்திரன் அருச்சித்தான்' என்பது திருவிளையாடற்புராணம் இந்திரன் பழி தீர்த்த படலத்தில் உள்ள செய்தி.

### பொன்வைத்த இடத்தில் பூ

மண்ணுலகம் கர்மபூமி. இங்கு இறைவனுக்கு ஆற்றும் வழிபாடு பெரும்பயன் விளைவிப்பது. எனவே விண்ணவர் மண்ணுலகம் நண்ணி இறை வழிபாடாற்றுவர்.

> 'புவனியில் போய்ப்பிறவாமையில் நாள் நாம்
> போக்குகின்றோம் அவமே இந்தப் பூமி
> சிவம் உய்யக் கொள்கின்ற வாறு'

என்பது திருவாசகம்[1] பூவுலகம் வந்து வழிபடும் தேவர்கள் மண்ணுலகில் வழிபாடாற்றும் போது பொன்மலர் இட்டு வழிபட இயலாதல்லவா? எனவே அவர்கள் மண்ணுலக விதிகட்கு ஏற்பத் தத்தம் வழிபடுதெய்வங்கட்குரி மலர்கொண்டு வழிபாடாற்றினர். பொன்மலர் வைத்து வழிபடலே சிறப்பு என்றாலும் பூவைத்து வழிபட்டனர். இதனால் 'பொன் வைத்த இடத்தில் பூ வைத்தல்' என்னும் புது நெறி தோன்றிற்று. அது இன்று ஒரு பழமொழியாயிற்று எனலாம்.

### ஸ்வர்ண புஷ்பம்

அருச்சனையில் பொன் மலருக்கு உள்ள நீங்கா இடம் இந்நாளிலும் நிலை பெற்றிடுத்தலை 'ஸ்வர்ண புஷ்பம் - பொன்மலர் இது பூசனையில் இடம் பெற வேண்டிய பொன் மலரைக் காட்டுவது மறையோதி இறைவனுக்கு பொன்மலர் சார்த்தி வழிபடுகிறோம். வேதநெறி (வைதிக பத்ததி) ஆகம நெறி (ஆகம பத்ததி) இரண்டினுள்ளும் இம்முறைக் காணப்படுதல் ஸ்வர்ண புஷ்பம் - பொன் மலர் பூசனையில் பொன் மலர் இட்டு வழிபடல் தொல் நெறியாதலைக் காட்டும்.

### வேதச் செய்தி

இறைவனுக்கும் இறைவிக்கும் உரிய மலர்கள் இவை இவை எனவும் திருமால் முதலிய பிற தெய்வங்கட்குரிய மலர்கள் இவை இவை எனவும் கூறும் நூல்கள் உள. புஷ்பவிதி புஷ்பபலன் முதலானவை இவை. இந் நூல்களுள் 'விசேஷமானவை என்று கூறப்பட்ட மலர்களைக் கொண்டு செய்யும் அர்ச்சனையைக் காட்டிலும் பொன் மலர் கொண்டு செய்யும் அருச்சனை பத்துமடங்கு பயனைத் தரும்' என்று ஸ்மிருதிகளுள் கூறப்பட்டுள்ளது.

> यत् पुण्यं प्रतिपुष्पे तद्दशधा स्वर्णनिर्मिते

என்பது வேதம் கூறும் செய்தி.

### பொனமலர் பற்றிய ஆகமச் செய்திகள்

பொன்மலர் பற்றிய செய்திகளை ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதரால்

1 திருவாசகம்: திருப்பள்ளி எழுச்சி. பாடல்.10.

அருளப்பட்டதும் ஆகமச் செய்திகளின் தொகுப்பாக அமைந்துமான சிவார்சனாசந்திரிகா' என்னும் நூல் பலபடப் பகருகின்றது.

பொன்மலர் மிகமிக விசேடமானது. அது நிர்மால்ய தோஷ மற்றது.

"स्वर्णपुष्पस्य नास्ति निमाल्यदोष"

என்பது சிவார்ச்சனா சந்திரிகா[1]

'அஞ்சலியுள் நிறைந்துள்ள சுவர்ண புஷ்பங்களால் . வித்தியா தேஹத்தை வகிக்கும் சிவபெருமானை ஆவாஹனம் செய்தலும் நூற்றெட்டு அல்லது எண்பத்தொன்று அல்லது ஐம்பது அல்லது இருபத்தைந்து சுவர்ண புஷ்பங்களால் தினமும் அருச்சித்தலும் மிகவும் சிறந்தவையாய் எண்ணிறந்த பலன்களைத் தரும். சுவர்ண புஷ்பம் செய்து பூசிக்கமுடியவில்லையாயின் சுவர்ண துண்டுகளாலாவது வெள்ளிப் புஷ்பங்களாலாவது பூசிக்கலாம்.

சுவர்ண புஷ்பத்துக்கு நிர்மாலிய தோஷம் கிடையாது. அது ஒரு வருடத்துக்கு மேல்தான் நிர்மாலியமாகும் அப்பொழுதும் பஞ்சகவ்யத்தால் சுத்தி செய்து பின்னரும் அருச்சிக்கலாம்.

என்ற செய்திகள் சிவார்ச்சனா சந்திரிகையுள் கூறப்பட்டுள்ளன.[2].

## திருப்பொறபூ

இறைவனுக்கு மலரால் அருச்சனை செய்வது போலப் பொன்மலர் அருச்சனைகள் சோழர்காலத்தில் நடைபெற்றனவாதல் வேண்டும். சோழர் காலத்தில் பொன்னால் ஆன பூக்களைக் கொடுத்த அறச் செயல்களைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

தஞ்சைப் பெருவுடையாருக்கு முதல் ராஜராஜன் ஏராளமான திருப்பொற்பூக்களை அளித்துள்ளான்.[3]

திருப்பொற்பூக்களை — ஸ்வர்ண- புஷ்பங்களை அளித்துள்ள கல் வெட்டுச்செய்திகளுள் லோக மஹாதேவியார் அளித்த திருப்பொற் பூக் கொடை குறிப்பிடத்தக்கதொன்று. இராஜராஜசோழன் துலாபார தானமும் இவனுடைய பட்டத்தரசியான லோஹ மஹாதேவி ஹிரண்ய கர்ப்பதானமும் திருவிசலூர்த் திருக்கோயிலில்ஆற்றினர்.[4] லோஹ

---

1. சிவார்ச்சனா சந்திரிகை - (நாகரி) மூலம். காளீச்வா சிவாசார் யார்பதிப்பு 1922 பக்.73.
2. சிவார்ச்சனா சந்திரிகா தமிழாக்கம். கும்பகோணம். 1927. பக். 125.
3. சிவபாத சேகரனின் தஞ்சைக்கல்வெட்டுக்கள் — கல்வெட்டெண 1,8,9,10 காண்க.
4. 42 OF 1907

மஹா தேவியார்தான் ஹிரண்ய கர்ப்பதானம் மேற்கொண்ட பொன்னில் இருந்து திருவலஞ்சுழியில் ஷேத்திரபால தேவர்க்கு இரண்டு பொன்மலர்கள் செய்தளித்துள்ளார்.

"திருவிசலூர் மஹாதேவர் கோயிலில் நம்பிராட்டியார் உலோக மஹாதேவியார் தான் ஹிரண்ய கர்ப்பதானம் மேற்கொண்ட பொன்னில் இருந்து திருவலஞ்சுழியில் க்ஷேத்திரபால தேவர்க்கு பொன் இரு கழஞ்சே முக்காலே மஞ்சாடியும் ஆறுமா பொற்பூ ஏற்றி னல்......"

என்பது கல்வெட்டு.[1] இதுபோலப் பொற் பூக்கள் அளிக்கப்பட்ட செய்திகளைப் பல கல்வெட்டுக்கள் காட்டுவனவாயுள்ளன.[2]

பொன்மலர்கள் நூறு

உலோக மஹாதேவி தான் திருவையாற்றில் எடுப்பித்த உலோக மஹாதேவீச்வரம் என்னும் கோயி (உத்தரகைலாசம்)வில் இறைவனுக்கு நூற்றுக்கும் மேற்பட்ட பொன்மலர்களை அளித்துள்ளாள்.[3]

இவள் அளித்த பொன்மலர்கள் பற்றிய விவரம்பின்வருமாறு:

| | | எண்ணிக்கை | மொத்த எடை |
|---|---|---|---|
| 1. | திருப்பொற்பூ | 51 | 50 கழஞ்சு |
| 2. | ,, | 100 | 49 1/2 கழஞ்சு 4 மஞ்சடி 2 மா |
| 3. | ,, | 1 | 1 கழஞ்சு 2 குன்றி |
| 4. | ,, | 1 | 1 1/4 கழஞ்சு |
| 5. | ,, | 18 | 18 கழஞ்சு 1 குன்றி |

இதனல் இவள் 171 திருப்பொற்பூக்களை அளித்தமை பெறப்படுகிறது. இவை எடையளவில் சிறியன. ஒவ்வொன்றும் சுமார் 2.1875 gram எடையின. இவை அணிகலன்களாகப் பயன்படுத்தத் தரப்பட்டன என்பதனைவிட அஷ்டோத்ரம் செய்யும் வண்ணம் அளிக்கப்பட்டனவாதல் கூடும். இவள் 10 கழஞ்சு எடை (21.875 GRAM)யில் தாமரைப் பூவினைப் போலப் பொன்னல் செய்யப்பட்ட தாமரைச் செயல் திருப்பொற்பூவினைத் தந்துள்ளமையும் அறிதற்குரியதொரு செய்தி யாகும்.

ஸ்ரீ பாதபுஷ்பமாக அட்டித் தொழுதல்

செல்வம் இறையருளால் வரப்பெறும் பேறுகளுள் ஒன்று. 'இடை நடுவில் கொடுக்கும் செல்வம் சிவன் தந்தது' என்ப

1. S.I.I. Vol. VIII No. 237. 633C of 1902.
2. S.I.I. Vol. II No.9. No. 46.
3. S.I.I. Vol. V No.521.

மேலோர். இஃதுணர்ந்தோர் வாழ்நாட் பகுதியில் தாம் பெறும் விலையுயர்ந்த பொருள்களை இறைவனுக்கே உரியதாக்கினர்; இறைவனைச் சிங்காரித்து இறையழகில் திளைத்தனர்.

முதல் ராஜசோழன் சிவபாதசேகரன். இவன் சேரரையும் பாண்டியரையும் சாளுக்யனையும் வென்று கருவூலத்தில் இருந்து கைப்பற்றிய பொன்னைத் தஞ்சைப் பெருவுடையாருக்கு ஸ்ரீ பாத புஷ்பமாக அர்ப்பணித்தான் –

"சத்யாச்ரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீ பாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுதருளின

திருப்பொற்பூ ஒன்று பொன் பதின்கழஞ்சாக இரண்டினல் பொன் இருபதின் கழஞ்சு

திருப்பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்சேய் முக்காலே நாலு மஞ்சாடியும் குன்றியாக பன்னிரண்டினல் பொன் நூற்று ஒரு பத்து ஒன்பதின் கழஞ்சரையே நாலு மஞ்சாடி

திருப்பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்சே முக்காலே நாலு மஞ்சாடியாகத் திருப்பொற்பூ பத்தினல் பொன் தொண்ணூற்று ஒன்பதின் கழஞ்சரை.

திருப்பொற்பூ ஒன்று பொன் ஒன்பதின் கழஞ்சேய் முக்காலே மூன்று மஞ்சாடியும் குன்றி

திருப்பொற்பூ ஒன்று பொன் கழஞ்சே முக்காலே மஞ்சாடி

தாமரைச் செயல் திருப்பொற்பூ ஒன்று பொன் பதின் முக்கழஞ்சேய் ஆறு மஞ்சாடி"

என்பது தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டின் ஒரு பகுதி. இதனல் 26 திருப்பொற்பூக்களை இராஜராஜன் ஸ்ரீ பாத புஷ்பமாக அளித்தமை பெறப்படும்.

### ஸ்ரீ பாதபுஷ்பமாக நவரத்னங்கள்

இராஜராஜ சோழன் பொன்மலர்களை ஸ்ரீ பாதபுஷ்பமாக அட்டித் திருவடி தொழுததனைப் போல நவரத்தினங்களை ஸ்ரீ பாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுதுள்ளான்.

"உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் ஸ்ரீ பாதபுஷ்பமாக அட்டித் திருவடி தொழுத இரண்டாந் தரத்தில் முத்தில்"

என்று தஞ்சைக் கல்வெட்டுக்களில் உள்ளது. இதனால் பொன்

---

1. கழஞ்சு = 2.1875 GRAM. சிவபாதசேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள் — வே. மஹாதேவன். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பொன்விழாக் கமிட்டி வெளியீடு. பக். 10.

2. சிவபாதசேகரனின் தஞ்சைக்கல்வெட்டு – எண்.1 காண்க.

மற்றும் முத்துக்களை ஸ்வர்ண புஷ்பங்களாகக் கருதி இறைவன் திருவடிகளில் சமர்ப்பித்த தொன்மையான வழக்காறு[1] புலனாகும்.

## ஆகமங்களில் ஸ்வர்ண புஷ்பபூஜை

டாக்டர் N.R. பட் கருத்துக்கள்

ஆகமங்களில் ஸுவர்ணபுஷ்ப பூஜை பற்றிப் பாண்டிச்சேரி பிரன்ச் இந்திய கலைக் கழகத்து ஆகமவியல் அறிஞர் டாக்டர் N.R. பட் அவர்கள் கூறியுள்ள செய்திகள் பின்வருமாறு:-

கனகாபிஷேகம் என்பது பண்டைய நாளில் பண்டிதர்களுக்கும், திருமடங்களின் தலைவர்களுக்கும், அரசர்கள் —, அரசர் நிகரான வர்கள் செய்து வந்த சிறப்பாகும்.

இவ்வாறு அறிஞர்களுக்குச் செய்து வைக்கும் சிறப்பை போலவே இறைவனுக்கே செய்யும் முறையை ஆகமங்கள் கூறு கின்றன.

சிவபெருமானுடைய திருமேனியே பொன்மயம் என்று வேதம் பலமுறை கூறுகிறது.

नमो हिरण्यवर्णाय हिरण्यरूपाय हिरण्यपतयेऽम्बिका पतय उमापतये पशुपतये नमो नमः ।
नमो हिरण्यवाहवे ।
हिरण्याय नमः हिरण्यलिङ्गाय नमः सुवर्णाय नमः सुवर्णलिङ्गाय नमः
य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते हिरण्यश्मश्रु हिरण्यकेश आप्रणखाः
सर्व एव सुवर्णः

என்பன போன்றவை வேதப்பிரமாணங்கள். ஞானத்தின் வண்ண மாகக் சுவர்ணம் கூறப்படுவதால் ஞான சபை — சிற்சபை பொன்னம்பலமாகக் காட்டப்பட்டுள்ளது.

ஹிரண்யரேதன் என்று சிவனுக்கு ஒரு திருநாமம் உண்டு. சிவஜ்யோதியே சுவர்ணம் என்பது இதன் கருத்து.

பெருமான் எழுந்தருளி இருக்கும் கைலை மலைக்கும் கனகாசலம் என்றே பெயர்.

இத்தகைய பெருமையுடைய சுவர்ணத்தை ஆலயங்களில் மகாஸ்னபனம் செய்யும் பொழுது கும்பத்தில் இருக்கும் நீரில்

---

1. சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள், எண். 8, 9, 10. இந்நூலில் இராஜராஜன் தந்த முத்துக்கள் பொன் முதலானவற்றின் விவரங்கள் பட்டியலுடன் அளிக்கப்பட்டுள்ளன. சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள் — பதிப்பாசிரியன் வே. மகாதேவன் எம்.ஏ., ஸ்ரீ ஜயேந்திரர் பொன்விழாக் கமிட்டி வெளியீடு.

இட்டு மந்திரித்த அந்த கும்ப ஜலத்தால் பெருமானுக்கு அபிஷேகம் செய்வது சுவர்ணோதகம் என்பதாகும். இதனையே லோஹோதகம் என்றும் ஆகமங்கள் கூறும்.

ताम्ररूप्यसुवर्णैस्तु युक्तं लोहोदकं भयेत् ।

என்பது அஜிதாகமம்.

ஸூக்ஷ்மம், அசிந்திய விச்வ சாதாக்யம், ரௌரவம், ஸுப்ர பேதம், தீப்தம் போன்ற ஆகமங்கள் சுவர்ண புஷ்பத்தின் இலக்கணத்தைக் கூறுகின்றன.

எட்டு தளங்கள், கர்ணிகை இவைகளோடு கூடிய தாமரை மலரை சுவர்ணத்தினுல் செய்ய வேண்டும். மூன்று பங்கு அளவுடையது உத்தமம் என்றும், இரண்டு பங்கு அளவுடையது மத்யமம் என்றும் ஒரு பங்கு அளவுடையது அதமம் என்றும் சுவர்ண புஷ்பத்தின் லக்ஷணத்தை அசிந்திய விச்வ ஸாதாக்யம் என்னும் ஆகமம் கூறுகிறது.

இத்தகைய சுவர்ண புஷ்ப பூஜையை இறைவனுக்கும் செய்யலாம். மனிதரிற் சிறந்தவர்களுக்கும் செய்யலாம் என்று சூக்ஷ்மாகமம் கூறுகிறது.

स्वर्णपुष्पार्चनं वक्ष्ये श्रृणु त्वं तत्प्रलज्जन ।
नराणां चैव कर्तव्यं देवानां च सुपूचितम् ।।

சுவர்ண புஷ்ப பூஜை முறைகளை சூக்ஷ்மாகமம் கூறியமுறையில் காண்போம். மறையவர்கள், காலையில் இறைவனுக்கு சிறப்பாக பூஜை செய்துவிட்டு "த்ரயம்பகம்" என்னும் மந்திரத்தர் பொற் றுமரையால் சிவலிங்கத்தின் சிரசில் பூஜிக்கவேண்டும் இதோடு பொன் நீலோத்பல மலரை "நீல" மந்திரத்தால் பூஜிக்கவேண்டும். இனி அரசர்கள் செய்யும் முறை. மத்யான்ன காலத்தில் "ஜெய" மந்திரத்தைச் சொல்லி பீடத்தின் மேல் சுவர்ண புஷ்பங்களால் பூஜிக்கவேண்டும். பொன்நீலோத்பல மலரால் மூல மந்திரத்தைச் சொல்லி நூற்றெட்டு முறை பூஜிக்க வேண்டும். இவ்வாறு இறைவனுக்கு சுவர்ண புஷ்பார்ச்சனை செய்யும் அரசன் இம்மை, மறுமை ஆகிய இருமைப் பயன்களையும் அடைகிருன்.

இனி வணிகர்கள் செய்யும் முறை கூறப்படுகிறது. மாலையில் பிரதோஷ காலத்தில் தீபாராதனை ஆன பிறகு பீடத்திற்கு வெளியில் மூல மந்திரத்தைச் சொல்லி பொன் மலர்களால் நூற்றெட்டு முறை பூஜிக்கவேண்டும்.

இனி நான்காவது விதி கூறப்படுகிறது. அர்த்த மண்டபத்தின் நடுவில் மண்டலம் அமைத்து அதில் சிவமந்திரங்களைச் சொல்லி பொன்மலர்களால் அர்ச்சிக்க வேண்டும்.

மேலும் விசேஷ விதியும் இதில் உண்டு. தினம் இருபத்தைந்து பொன்மலர்கள் வீதம் ஒரு வருஷம் முடிய இறைவனை அர்ச்சிப் பவர்கள் கோரிய பயன்களைப் பெறுவர். எண்பத்தொரு பதங்களின் எண்ணிக்கையில் பொன்மலர்களால் ஐந்து வருடங்கள் தினம் இறை வனை பூஜிக்கலாம். தினமு நூற்றெட்டு பொன்மலர்களால் பத்து வருடங்கள் பூஜிப்பவர்கள் எல்லா விருப்பங்களும் நிரம்பப்பெற்று ஜீவன் முக்தராகவும் ஆவார்கள். இவ்வாறே இருபது வருடங்கள் செய்பவர்கள் அச்வமேத யாகம் செய்த பயனை அடைவார்கள். முப்பதஉ ஆண்டுகள் செய்தால் ஸாலோக்ய பதவியும், ஐம்பது ஆண்டுகள் செய்தால் ஸாமீப்ய நிலையையும், எண்பத்தொரு வருடங் களுக்கு ஸாரூப்யமும், இதற்குமேலும் செய்பவர்கள் ஸாயுஜ்ய முக்தி யையும் அடைவார்கள்.

சாதாரண விஸ்வார்ச்சனை இருமடங்கு பலனைத் தரும்.

“திடஞானி தரிசனமே சிவத்தின் சேவை” என்னும் ரிபுகீதை யின்படி பரம்ம ஞானிகளுக்குச் செய்யும் எல்லாவகை வழிபாடுகளும் சிவபெருமானுக்கே செய்ததாகும். கனகமாகவே இருப்பவர் சிவபெ ருமான். “கனக:” என்பது சிவபெருமானுடைய திருநாமம். ஞானனு பவத்தர் சிவமான ஞானிகளுக்குச் சிவஸ்வரூபமான கனகத்தர் இம்மை நாமும் சிவத்தையே பெறுவோம்.

**பீஜோதகம்**

இறைவனைப் பொன்மலர் இட்டுப் பரவிய நம் முன்னோர் பொன் கலந்த நீரினை அபிஷேகித்து வணங்கினர். பொன் (சுவர்ண) அபிஷேக விதிமுறைகளை ஆகமநூல்கள் காட்டுகின்றன.

இறைவனுக்குச் செய்யும் ‘சுவர்ணுபிஷேகம்’ ‘பீஜோதகம்’ என்னும் பெயர் பெறும் பீஜோதகமாவது ‘யவம் நீவாரம், நெல், பயறு, வெண்கடுகு வாசனுதிரவியம்,’ சுவர்ணம், சம்பா நெல் ஆகியவற்றுடன் கூடிய நீரால் அபிஷேகம் செய்வது பீஜோதகம். மூலமந்திரத்துக்குரிய பீஜாக்ஷரத்தால் கந்த புஷ்ப தூப தீபங்களைக் கொண்டு அருச்சிக்க வேண்டும் என்கிறது சிவார்ச்சனா சந்தரிகை.[1] சுவர்ணத்துடன் கூடிய நீரால் இறைவனை அருச்சனை புரிவோர் குபேரலோகம் அடைவர் என்று சுவர்ணுபிஷேக பலன் கூறப்படும்.[2]

**ஆகமங்களில் கனகாபிஷேகம்.**

காமிகாமத்தில் கனகாபிஷேகம் புரிய வேண்டிய முறை பற்றிய விதிகள் கூறப்பட்டுள்ளன.

---

1. சிவார்ச்சண சந்தரிகை — தமிழ்மொழி பெயர்ப்பு பக். 74.
2. சிவார்ச்சண சந்தரிகை — தமிழ்மொழி பெயர்ப்பு பக். 76.

"உலகின் கண் உண்டாகும் சர்வ உத்பாதங்களும் நீங்கி உலகம் நன்மையடைதற் பொருட்டுச் சுபமுகூர்த்தத்தில் செய்யவேண்டிய அபிஷேக முறை பின்வருமாறு:-
என்று கூறத் தொடங்கி

"தேவாலயம் நந்தவனம் முதலிய ஏதாவதொரு நல்ல இடத்தில் தோரணங்களால் அலங்கரித்துப் பொன் வெள்ளி பால்மரம் முதலியவைகளால் செய்யப் பெற்ற பீடத்தில் புஷ்பங்களைப் பரப்பி, அதன்மேல் பொன்னைப்பரப்பி நீராடித் தூய ஆடையலங்காரத்துடன் விளங்கும் கர்த்தாவை அதில் அமர்த்தி அமைச்சர் அமைச்சர் புரோஹிதர் சோதிடர், புலவர், பரிசனங்கள் புடைசூழ வாத்யங்கள் முழங்க 'சுராஸ்த்வா மபிஷிஞ்சந்து' 'ஹிரண்யவர்ணு' என்பன முதலிய மந்திரங்களால் அபிஷேகம் செய்யவேண்டும்." என்று காமிகாகமம் கூறும். குருநாதர்க்குக் கனகாபிஷேகம் செயின் எல்லா இன்னல்களும் நீங்கி உலகம் நன்மையுறும் என இந்நூல் கூறுதல் அறிதற்பாலது — இது உத்தர காமிகாமத்துட் கண்டது.

சாந்தி நூல்களில்

இல்லறத்தார்க்குக் கூறப்பட்டுள்ள சாந்தி ஹோமம் மற்றும் அபிஷேகம் பற்றிய விதிகளைக் கூறும் சாந்தி குசுமாகரம் முற்பகுதியில் ஷஷ்ட் அப்த பூர்த்தி (வரிசை எண். 41) விதிகளைக் கூறுங்கால் 'ஸ்நான ப்ரஹார:' என்னும் பகுதியில் பத்து வகையான பொருள்களாலான அபிஷேகம் கூறப்பெறும். கோரோசனை பசு நெய் தயிர் அருகு, பசும்பால் பழம், புஷ்பம் (கண்ணடி; தீபம் தர்சித்தல்) மண், தங்கம் முதலிய அபிஷேகங்களின் பின் கும்பங்களாலியன்ற நீரை அபிஷேகித்தல் என்னும் (தஸவித) அபிஷேக முறை இதனுட் கண்டது. இதனுள் ஸ்வர்ணம் ஸ்நானப் பொருள்களுள் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளமையும் அறியத்தக்கது. "சுவர்ணம் பாவனம் ந்ருணாம் சௌபாக்ய கரம் உத்தமம்" என்பது சாந்திகுசுமாகரம்![1]

சாந்தி ரத்னாஹரம், சாந்தி கல்ப சாகரம், முதலான நூல்களுள்ளும் சஷ்ட் அப்த பூர்த்தி, பீமரத சாந்தி, சதாபிஷேகம், ராஜாபிஷேகம் முதலானவற்றுள் அபிஷேக நீருடன் சுவர்ணத்தை இடல் கூறப் பெற்றுள்ளமை அறிதற் பாலது.

கனகாபிஷேக விதிகள்

கனகாபிஷேகம் பற்றிச் சாந்தி குசுமாகரம், சாந்திரத்னகரம் என்னும் இருநூல்களும் கூறும். இந்நூற்கண் உள்ள குறிப்புக்கள், இக் கனகாபிஷேகம் ஆகமபரமானது; சைவாகமங்களில் இக்கனகாபிஷேகம் உத்தர காண்டத்தில் உமா மகேச்வர சம்வாதையில் இப்பகுதி உள்ளது என்று கூறும்.

---

1. சாந்திகுசுமாரகம். கும்பகோணம் வைதிகவர்த்தினி பதிப்பு (27-5-1935) முற்பகுதி பக். 90.

1. சாந்தி குஸுமாகரம்

சாந்தி குஸுமாகரம் என்னும் நூலில் சகஸ்ர சந்திர தரிசன ப்ர பௌத்திர ஜனன சாந்தி என்னும் பிரகரணத்தில் (எண் 99) கனகாபிஷேக விதிகள் கூறப்பட்டுள்ளன. ஆயிரம் பிறை கண்டவர்க்குச் செய்யும் கனகாபிஷேகம் 'சைவகாரும் உமா மகேஸ்வர சம்வாதே சகஸ்ர சந்திர தர்சனப் ப்ரபௌத்ர ஜனன சாந்தி' எனப்படுகிறது.

கனகாபிஷேகம் செய்துகொள்ளும் எஜமானனை அழகிய ஆசனத்தில் அமர்வித்தல் வேண்டும்

நவக்கிரஹ மந்திரக்களாலும்
சதருத்ரீய மந்திரங்ளாலும்
ஸ்ரீ சூக்தத்தினாலும் ஸ்வர்ணாபிஷேகம் செய்விக்கவேண்டும்.

'சுராஸ்த்வா' முதலான புராண மந்திரங்களாலும் கனகாபிஷேகம் செய்விக்கவேண்டும்.

यजमान भद्रपीठे उपविश्य द्रिजोत्रमाः । नवग्रहोत्र मन्त्रोच शतरुद्रीयमन्द्रतः ।।
स्वर्णाभिषेचनं कुर्युः श्री सूक्तेन विघानतः ।। सुरास्त्वाऽऽदि पुराणोक्तै मन्त्रैरपि ततः परम ।।

என்றுள்ளது. கனகாபிஷேகக்குமுன் கலகஸ்தானம், பூஜை ஹோமம் செய்யும் முறைகளும் பின்னர் செய்யும் புனர்பூஜைகளும் கும்பங்களை யஜமானனுக்கு அபிஷேகிக்கும் முறைகளும் இதனுள் விரிவாகக் கூறப்படும்.[1]

2. சாந்தி ரத்னாகரம்.

இந்நூலுள் கனகாபிஷேகம் சைவாகமே உத்தர காண்டே உமாமகேஸ்வர சம்வாதே ஸ்தாபிஷேக கனகாபிஷேகம் என 'சகஸ்ர சந்திர தர்சன பர்பௌத்திர ஜனன சாந்தி' பிர்கரணம் இறுதியில் கூறப்படும். இதனுட்கண்ட விதிமுறைகள் சாந்திகுஸுமாகரத்துள் உள்ளதனை ஒப்பவே உள்ளது.

3. ஏனைய பல சாந்தி நூல்களுள்ளும் இவ்வாறே கூறப்பட்டுள்ளன. சதாபிஷேகம் செய்து கொண்ட பின்னர் கனகாபிஷேகம் புரிந்து கொள்வர் என்பது பௌராணிக பத்ததி என்பது நூல்களுட்கொண்டது.

கனகாபிஷேகத்துக்குரியோர்

அரசர்களுக்கும் செல்வந்தருக்கும் இறைவனுக்கும் முனிவர்கட்கும் ஆற்றிய கனகாபிஷேகங்கள் சாதாரணமானவர்கட்கு நடைபெறும் கனகாபிஷேகங்களில் இருந்து பெரிதும் மாறுபடுவன. தம் குருநாதருக்குக் கனகாபிஷேகம் புரிதலைத் தம்பாக்யமாகக் கருதிய மன்னர்கள் தம் செல்வநிலைக்கேற்ப பெரும் பொன்னைப் பூக்களாக்கி அபிஷேகித்தனர். இக்கனகாபிஷேகங்கள் மிகப்பல காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர் திருமரபினர்க்கு நிகழ்ந்துள்ளன.

---

1. சாந்தி ரத்னகரம். உத்தர பாவம் க்ரந்த பதிப்பு (1917) பர்கரணம் 91. பக்கம். 208-210.

செயற்கரிய செயல்கள் புரிந்த காலங்களில் புலவர்கட்கும் மற்றையோருக்கும் மன்னர்கள் கனகாபிடேகங்கள் செய்தனர். ஸ்ரீ மத் அப்பைய தீக்ஷித்ருக்கும் ரகுநாத நாயக்கருக்கும் நடந்த கனகாபிடேகங்கள் இத்தகையன. சகஜி மன்னன் தீர்த்த யாத்திரை யஇன்போது இராமேச்வரத்தில் தன் தாய்க்குக் கனகாபிஷேகம் செய்தனன் என்பதும் அவள் அப்பொன்னை அறப்பணிகளில் செல ழித்தனள் என்பதும் அறியப்பெறும்.

முற்பட்ட கனகாபிஷேகங்கள்

1. அப்பைய தீக்ஷிதர்க்குக் கனகாபிஷேகம்

தென்னகத்தில் அத்துவைத்ப் பயிர் தழைத்தோங்கச் செய்தவருள் த்ராவிடாசாரியர், ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் ஆகியோர் முற்பட்டோ ராவர். இடைக்காலத்துத் த்ராவிடருள் குறிப்பிடத்தக்கவர் ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் எனும் சான்றோராவர். இவர் 1520-1592-ல் வாழ்ந்தவர். பற்பல நூல்கள் யாத்தவர்.

இவர் வேலூர் நாயக்க மன்னன் சின்னபொம்மன் (1549-1579) அரசவையை அலங்கரித்தவர். இவர் 'சிவ சந்திர தீபிகை' எனும் எனும் நூலில் இவனைக்குறிப்பர். இந்நூல் இம்மன்னன் சிவபூஜை துவங்குதற் பொருட்டாக யாகக்ப் பெற்றநூல். இவ்வரசன் ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் சிவர்க்கமணி தீபிகை என்னும் நூலை அருளியமையின் பொருட்டாகக் கனகாபிஷேகம் செய்தனன் எனச் சிவசந்திர தீபிகை குறிக்கும். இக்கனகாபிஷேகத்தை

शिवार्कमणिदीपिकावसानलब्धकनकस्नानः प्रशंसितससमर-
पुङ्गवयज्वना यथा —
हेमाभिषेकसमये परितो निषण्णसौवर्णसंहतिमिषाच्चिनबोम्मभूपः ।
अप्पय्यदीक्षितमणिरनवद्यविद्याकल्पद्रुमस्य कुरुते कनकालवालम् ।।

என்னும் நளசரித்திர நாடகச் செய்யுளாலும்[1]

नानादेशनरेन्द्रमण्डलमहायत्नातिदूरीभव-
त्काचित्कपदारविन्दविनतेरप्पय्ययज्वप्रभोः ।
शैवोत्कर्षपरिष्कृतैरहरहस्सूक्तैस्सुधालालितैः ·
फुल्लत्कर्णपुटस्य बोम्मनृपतः पुण्यानि गण्यानि किम् ।।

என்னும் செய்யுளாலும் அறியலாம்.[2]

1. நளசரித்திர நாடகம் — நீலகண்டதீக்ஷீதர். C. சங்கர ராம சாஸ்த்ரி பதிப்பு. ஸ்ரீ பாலமனோரமா பிரஸ். மயிலை 1925. ப்ரதமாங்கம் பக்கம் 4. செய்யுள். 7. 2. Srimad Appaiya Dikshitha – Dr. Ramesan page-208.

ஸ்ரீ கண்டாபாஷ்யத்துக்கு விளக்கமாகச் சிவார்க்கமணி தீபிகை எழுதியமை காரணமாகச் சின்ன பொம்ம நாயக்கன் ஸ்ரீ அப்பைய தீக்ஷிதருக்குக் கனகாபிஷேகம் புரிந்தமை ஆதம்பாக்கம் காளகண்டேச்வரர் கோயில் கல்வெட்டுக் காட்டுகிறது. இச்சாசனம் மேற்படி கனகாபிடேகப் பொன்கொண்டு அப்பைய தீக்ஷிதர் அக்கற்றளியைக் கட்டிய வரலாற்றைக் கூறும்.

विद्वदगुरोर्विहितविश्वजिदध्वरस्य श्रीसर्वतोभुखमहाव्रमहाव्रतयाजिसूनोः ।
श्रीरङ्गराजमखिनः श्रित चन्द्रमौलिरस्त्यप्पै दीक्षित इति प्रथितस्तनूजः ।।
येन श्री चिन्नबोम्मक्षितिपबलभिदः कीर्तिख्याहतासीत्
येन श्रीकण्ठभाष्यं परमशिवमतस्थापनायोद्धार ।
तेन श्री रङ्गराजाध्वरिवरतनयेनाप्पयज्वाधिपेना —
कारि प्रौढोन्नताग्रं रजतगिरिनिभं कालकण्ठेशधाम ।।

स्वस्ति श्री शकाब्दं १५०४ க்கு மேல் செல்லா நின்ற चित्रभानु வருஷம் स्वामि कालकण्ठश्वर ருடகோவிலிலே कण्ठभाष्यं ஐஞ்நூறு विद्वांस ருக்கு படிப்பிக்க அதுக்கு शिवार्कमणिदीपिकैव्यारव्यान_ மும் பண்ணி வேலூரா் चिन्नबोम्म நாயக்கர் கய்யிலே कनकाभिषेक முமம் பண்ணி விச்சுக்கொண்டு அதுக்குப்பின் வேலூரிலே_शिवार्कमणिदीपिकै யும் ஐஞ்நூறு विद्वांस ருக்கு படிப்பிக்க चिन्नबोम्म नाय க்கர் கய்யிலே स्वर्ण ங்களும் अग्रहार ங்களும் படைப்பிச்சு प्रतिविराज्यं பண்ணிவிச்சு न्यायरनामणि कल्पतरुपरिमल முதலான நூறு प्रबन्धं பண்ணின अप्पैदीनित ருட कृति இந்த शिवालयं शुभमस्तु

अप्प दीक्षितर् सदा सेवै ।
नीलकण्ठदीक्षितर् सदा सेवै ।
अरुणगिरि दीक्षितर् सदा सेवै ।
विश्वजिदप्पै दीक्षितर् सदा सेवै ।
उमामहेश्वर दीक्षितर् सदा सेवै ।
यज्ञश्वर दीक्षितर् सदा सेवै ।
मरुताल लक्षन् सदा सेवै ।

என்னும் ஆதம்பாக்கம் கல்வெட்டு இச்செய்திகளைக் காட்டுகின்றது.

## 2. தஞ்சை நாயக்கமன்னர் காலத்தில்

சோழவேந்தர்களை அடுத்துத் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு நாயக்க மரபினர் ஆட்சிபுரிந்தனர். அம்மரபினருள் ஒருவன் இரகுநாத நாயக்கன். ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் இவ்வரசனின் அமைச்சர். இம் மன்னர் ஒரே நாளில் ஒரு பெரிய இலக்கியநூலைத் தெலுங்கு மொழியில் படைத்தமை காரணமாக இவனுக்கு இலன் தந்தையால் கனகாபிடேகம் செய்யப்பட்டதென்பது இலக்கிய வாயிலாக அறியப்பெறும் செய்தி.

ஸ்ரீ காமகோடி பீடாதிபர்க்குக் கனகாபிஷேகங்கள்

சென்ற நூற்றாண்டுகளில் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியர் திருமரபினர்க்கு நடைபெற்ற கனகாபிஷேகங்களை பல ஆவணங்கள் குறிக்கின்றன. இவற்றின் அறியப்படும் செய்திகளுட் சில பின்வருமாறு:

வரலாற்று வணங்களின் அடிப்படையில் நோக்கும் போது ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய கனமிகட்கு 1801-ல் குடந்தையில் நடைபெற்ற கனகாபிடேகமும முதலாவது என்பது அறியப்படும்.

**1. கனகாபிடேகம் செய்யும் காலம்:**

கனகாபிடேகம் செய்வதற்குரிய காலம் எது? எனவும் இவற்றின் அடிப்படையில் ஊகிக்கவியலும்.

1. பழங்காலத்தவர் ஜகத்குருவினைத் தரிசிக்கும் காலங்களில் கனகாபிஷேகம் செய்தனர். அக்காலத்தரசர் அருளாட்சியாளராய தம் குருநாதர்க்குத் கனகாபிடேகம் ஆற்றலைத்தரும் கடமைகளுள் ஒருபணியாகக் கருதி ஏகதேசமாகச் செய்தனர் எனலாம்.

2. ஜகத்குருநாதர் செயற்கருஞ்செயல்களாற்றி — விஜய யாத்திரைகள் புரிந்து மீண்ட காலங்களில் கனகாபிடேகங்கள் செய்விக்கப் பட்டதுண்டு.

3. தம் அரண்மனைக்குப் பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் எழுந்தருளிய போதெல்லாம் பூமன்னர்கள் ஏகதேசமாகக் கனகாபிஷேகம் புரிந்துள்ளனர்.

இக்காலத்து கனகாபிஷேகங்களில் திருப்பொற்பூக்களுக்குப் பதிலாகப் பொற்காசுகளைக் கையாள்வர்.

கனகாபிடேகப்பலன்

கனகாபிஷேகம் 'உலகில் உள்ள உற்பாதங்கள் அனைத்தும நீங்கி உலகம் நலம் பெறச் செய்யப்படுவது' என்பது ஆகமங்களுட் கண்டது. வையம் வாழத் தாம் வாழும் ஜகத்குருநாதர்கட்குச் செய்யப் பெறும் இக்கனகாபிஷேக மகத்வம் இதனுல் பெறப்பெறும்.

'தெளிவு குருவின் திருமேனி காண்டல்' என்பர் திருமூலர். குருதரிசனம் சிவதரிசனம். ஆசார்யாள் நடமாடும் தெய்வம். அவர் பாததரிசனம் நம்பாவத்தை நசிப்பது பவநெறி மாற்றுவது. தெய்வத்தைத்தரிசிப்பது — விசேஷ காலங்களில் தரிசிப்பது பெரும் புண்ணியம் விளைவிப்பது. குருநாதருச் நடைபெறும் கனகாபிடேகங்களில் பங்கேற்றல் — குருநாதருக்கு நிகழும் கனகாபிஷேகங்களைத் தரிசித்தல் மிகப் பெரும்பலன் தருவது என்பது ஒருதலை. கனகாபிஷேக தரிசனப்பேறு பெற்ற சிஷ்யர்கள், தாம் கண் பெற்றபேறு பெற்றவர் என்பதில் ஐயமில்லை.

# VI. ஸ்ரீ மஹாதேவேந்திரர்க்குக் கனகாபிஷேகம்

## 1801

கி.பி. 1801-இல் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளுக்குக் கனகாபிஷேகம் நிகழ்ந்த அருஞ்செயலைத் தஞ்சை சரஸ்வதி மஹாலில் உள்ளதொரு ஆணவம் காட்டும்.

*ஸ்ரீ மஹாதேவேந்திரர்*

கி.பி. 1801-இல் ஸ்ரீ காமகோடி பீடாதிபராக இலங்கியவர்கள் 63-ஆவது பீடாதிபராய ஸ்ரீ மஹாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆவர். இவர் 1783 முதல் 1814 வரையிலான 31 ஆண்டுக்காலம் அருளாட்சி புரிந்தவர்கள். இவர்கள் 1783 ஜனவரி 20-இல் பீடாதிபத்யம் உற்றனர்[1]. இவர் குடந்தையில் திரு அவதாரம் செய்தவர்; கர்நாடக பிராமணர். பூர்வாச்ரமத்தே அண்ணுச்ரௌதிகள் என்னும் பெயரினர்[2]. இவர் பெரும் யோகி எனவும் ஸ்ரீ மடத்துக்கருகில் ஓடுவதான காவிரியாற்றினை அடிக்கடி கடந்து அக்கரையினை எய்தி யோகநிலையில் இருப்பர் எனவும் இவர்கள் இவ்வாறு யோகம் புரியும் விவரமறிந்த தஞ்சை மன்னன் ஸ்ரீ மத் ஆசார்யாள் யோகம் புரியும் இடத்தில் ஒரு மண்டபம் கட்டுவித்தனன் எனவும் கூறுவர்[3].

10-9-1783 - இல்[4] சிவகங்கை மன்னனை விசையரகுநாத பெரிய உடையார்

ஸ்ரீ காஞ்சிபுரம் திவ்விய ஷேத்ரத்தில் இருக்கும் ஸ்ரீ காமகோடி பீட சிங்காஸ பிஷிக்த ஸ்ரீமத் மஹா பகவத் பாதாச்சார்ய சுவாமியவாளுடைய மடத்துக்குத் திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ சந்திர மௌலீச்சர சுவாமி பூஜை தீபாராதனை பிராமண போஜனங்கட்கு...'

பாண்டி மண்டலத்துச் சிவகங்கை சீர்மையில் உள்ள 'புல்வச்சேரி' என்னும் சிற்றூரைக் சர்வமான்யமாக அளித்துள்ளான்.

இப்பெரியவாள் காலத்தில் இரண்டாம் துளஜா (1764-1787) அமர்சிங் (1787-1797) இரண்டாம் சரபோஜி (1798-1838) ஆகியோர் தஞ்சை மராட்ட அரசராக இருந்தனர். இவருள் இரண்டாம்

---

1. கல்கி தீபாவளி மலர். 1965. பக்கம் 1000
2. THE TRAD AGE OF SANKARA PAGE–135
3. ஸ்ரீ சங்கர குரு பரம்பரை — பக்கம்—190
4. சகம். 1705. ஆவணி 28 ஆம் நாள்.

சரபோஜி கி.பி. 1798இல் தஞ்சை அரியணை ஏறியவன். இவன் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் பேராதரவுக்குப் பாத்திரமானவன்.[1] பன்மொழிகளில் பாண்டித்யமுடையவன் பேரறிவாளன்[2] புலவரால் புகழப்பட்ட பெருமை சான்றவன்.[3] கல்விமான்[4] இவன் தன்னாட்சியின் இறுதிவரை கிழக்கிந்தியக் கம்பெனியரசினர்க்கு விசுவாசமாக இருந்தவன்.[5] இவன் திருமணம் 1898 - இல் நிகழ்ந்தது. இவன் 08-03-1782-ல் இயற்கை எய்தினன்.[6]

ஆசார்ய பக்தி

இரண்டாம் சரபோஜி காஞ்சி ஸ்ரீ மடத்தில் ஸ்ரீ சந்திர மவுலிச்வர சுவாமிக்கு இவன் கோயில் ஒன்று எடுப்பித்தமையைக் கல்வெட்டும்[7] ஆவணங்களும்[8] கூறுநிற்கும்.

இவன் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளைத் தரிசிக்க விரும்பி எழுதிய விக்ஞாபனம்[9] இனிய நடையால் இயன்ற அரியதொரு ஆவணமாகும்.

'காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளே எம் எல்லோருக்கும் குருநாதர். அவர் ஒருவரே (சமய சம்பந்தமான) இக்கேள்விக்கு மாறுபாட்டுக்கு இடமின்றி விடை கூறத் தக்கவர்' என இவன்

---

1. தேவந்திர குறவஞ்சி முதலான நாடக நூல்களின் ஆசிரியன். எண் 2384 TANJORE AS A SEAT OF MUSIC. P. 114.

2. கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் எழுதிய சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகம் முதலாயின.

3. ராயல் ஏசியாடிக் சொசைடி உறுப்பினன். தஞ்சை சரஸ்வதி மஹால் இதழ் XX பக்கம் 18.

4. கும்னி அரசு அறிக்கை வெளியிட்டது. மோடி 6:93

5. ச.ம. மோ.த. 10 பக்கம் 14 - 15.

6. மோடி ஆவணம். தொகுதி. 8: மூட்டை எண்.148c 14 ல் 1. பக்.6.

7. 'ஸ்ரீ சந்திர மௌலீச்வர ஸ்வாமிஸந்ராஸார்த்த ராஜஸ்ரீ சத்ரபதி ஸெரபோஜி மஹாராஜா ஷாக்ருத ஆலயம் ப்ரதிஷ்டா ஷலி வாஹன ஷக வ்ருஷ நாம சம்வத்சரமாக சுத்த பஞ்சமி பானுவார' — ஸ்ரீ சந்திர மவுலிச்வரர் கோயில் — ஸ்ரீமடம். Copper plate Inscriptions.... OF THE KAMAKOTI PITHA INTRO Page. 3. F.N. என்பது கல்வெட்டு.

8. மோடி ஆவணம். vol. VIII 118 C.

9. SRI KAMAKOTI PITHA OF SRI SANKARACHARYA – N. RAMESAN. Page 441.

எல்லீசு துரைக்கு எழுதியுள்ள கடித ஆவணம்[4] இவனும் கிழக்கிந்தியக் கம்பெனி அரசும் பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் மாட்டுக் கொண்டிலங்கிய அருமதிப்புக் காட்டுவதாகும்.

காஞ்சிப் பெரியவருக்குக் கனகாபிஷேகம்

இரண்டாம் சரபோஜி தான் அரசனு (1898) பின் ஜகத்குரு ஸ்ரீமத் ஆசார்யாளைக் கி.பி. 1801இல் கும்பகோணம் வந்து முதன் முறையாகத் தரிசித்தனன். தான் ஜகத்குரு ஸ்ரீ மஹாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகளைத் தரிசித்த காலத்தில் ஸ்ரீமத் ஆசார்யாளுக்குக் கனகாபிஷேகம் செய்வித்தனன்.

1802 — ஆவணம்.

கி.பி. 1801—இல் நடந்த இக்கனகாபிஷேக நிகழ்ச்சியினைத் தஞ்சை சரசுவதி மஹால் ரிக்கார்டு ஒன்று குறிப்பிடும். இவ்வாவணம் மராட்டிய மொழி ஆவணம். மோடி எழுத்துக்களால் ஆனது.

"சகர்சூன் ஆண்டு 1202 கும்பகோணத்தில் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகட்கு கனகாபிஷேகத்துக்காகச் சக்கரம் 500"

என்பது ஆவணக் குறிப்பாகும்.

சில செய்திகள்

மன்னன் 500 சக்கரம் தந்து கனகாபிஷேகம் செய்தது தொடர்பான அரண்மனைச் செலவுக் குறிப்பு இது. இக்குறிப்பினின்று அறியப் பெறும் செய்திகளாவன :-

1. மன்னர் காலங்களில் கனகாபிஷேகங்கள் ஏகதேசமாகச் செய்விக்கப்பட்டன.

2. அரசன் ஸ்ரீ மடம் சென்று தம் குருநாதரைத் தரிசித்த காலத்து இக் கனகாபிஷேகம் செய்தனன் (இதனுல் மிகப பெருஞ்செல்வர் தம் குருநாதரைத் தரிசிக்குங்கால் தம் குருநாதர்க்காற்ற வேண்டிய வழிபாடுகளுள் இதுவும் ஒன்று என்பது பெறப்படும்)

3. மேற்படி கனகாபிடேகம் குடந்தையில் நடைபெற்றது.

செயற்கரிய செய்தார்க்குச் செய்யும் சிறப்பு

ஆவணச்சான்றுதாரங்களின் அடிப்படையில் அறியப்படும் முதல் கனகாபிடேகம் 1801—ல் நிகழ்ந்த இக்கனகாபிஷேகமேயாகும்.

---

As the latter is the priert OF OUR TRIBE HE HAS UNDISPUTED RIGHT TO DICIDE THE QUESTION –

19th Sep.1806 – THE CREST JEWEL OF DIVINE DRAVIDIAN CULTURE A. KUPPUSWAMY Appendix F. Page. V

கனகாபிஷேகம் நினைத்த மாத்திரத்து ஆற்றற் பால தொன்றன்று. மிகமுக்யத்துவமுடையது. செயற்கரிய செயல்களைச் செய்த காலங் களில் ஆற்றற்குரிய தொன்று.

ஸ்ரீமத் ஆசார்யாள் ஸ்ரீமகா தேவேந்திரர் கி.பி. 1783—ல் ஸ்ரீ காமகோடி பீடாதிபத்யம் ஏற்கிறார்.

I தம் அருட்பணிகளால் சிவகங்கை சமஸ்தானதிபர் முதலான பல்வேறு சிற்றரசரால் பெரிதும் போற்றப்பட்ட இவ்வடிகளார் மிகப்பெரியதொரு விஜய யாத்திரை மேற்கொள்கிறார். இவ்விஜய யாத்ரா காலத்துப்பிறப்பிக்கப்பட்ட இருவேறு FIRMANகள் யாத்திரையை விளக்குவன.

1. ஸ்ரீ மஹா குருவாகிய சங்கராச்சார்ய சுவாமி மஹான் (MAHANTH) கிருஷ்ணாவுக்கும் திருநெல்வேலிக்கும் இடையில் விஜய யாத்திரை மேற்கொண்டமையை ஒட்டிக் கி.பி. 1792—ல் கிழக்கிந்தியக் கம்பெனி நிர்வாகம் ஒரு ரஹதாரி பாஸ்போர்ட்டு அளித்தது. இது கம்பெனியார் ஸ்ரீமத் ஆசார்யாள் மாட்டுக் கொண்டிருந்த பெரும திப்பினைப் புலப்படுத்துவது.

2. 'ஸ்ரீ காமகோடி சங்கராச்சாரி மஹன்த் அவர்கள்' திருப்பதி கிருஷ்ணா ராமேச்வரம் போகும்போது அவருக்குச் சகல சவுகரியங்களும் செய்து தரவேண்டும் என்னும் பிர்மென் 'ஸ்ரீ காமகோடி பீடம் சங்கராசார்யலுவாரிகி' ஆர்க்காட்டு நவாப்பினால் 1792 டிசம்பர் 28 ஆம் தேதி தரப்பட்டுள்ளது. இது மற்று மதத்தவராலும் ஸ்ரீ மஹாதேவேந்திரர் ஏற்றுப் போற்றப்பட்டமை காட்டுவது.

II இப்பெரும் விஜய யாத்திரையை அடுத்து கி.பி. 1797 — இல்

"ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யானம் அதிஷ்டானே சிம்ஹாசனாபிஷிக்தானும் ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ மஹா தேவேந்திர சரஸ்வதி சுவாமிகட்கு"

உள்ள சகல ஸ்வந்தர மரியாதைகளையும் ஒப்புக்கொண்டு ஆமனிச் சிருங்கேரி சுவாமிகள் உடன்படிக்கை எழுதி ஸ்ரீ முகமுத்திரை இட்டளித்த நிகழ்ச்சி வரலாற்று முக்கியத்துவம் பொருந்தியதாகும்.

III இதன் பின் கி.பி. 1798—இல் இரண்டாம் சரபோஜி தஞ்சை மன்னன் ஆகிறான்.

IV ஸ்ரீமத் ஆசார்யாள் கி.பி. 1801—ல் கும்பகோணம் ஸ்ரீ கும்பேச்வரன் கோயிலில் திருப்பணிகள் ஆற்றி ஸ்ரீ சோமாஸ் கந்தருக்குத் திருமண்டபம் அமைக்கிறார்.

இவ்வாறுகத் தொடர்ந்து செயற்கரும் செயல் பல ஆற்றிய ஸ்ரீமத் ஆசார்யாளைத் தான் முதன்முதலாகத் தரிசித்த காலத்தில் மன்னவன் கனகாபிஷேகம் செய்விக்கிறுன் எனலாம்.

சக்கரம் நாணயமாற்று

இனி அக்காலக் கனகாபிஷேகத்துக்கு அளிக்கப்பட்ட பொன் எவ்வளவு என நோக்குவோம். கனகாபிஷேகத்துக்கு 500 சக்கரம் அளிக்கப்பட்டது என்பது ஆவணம். இதன் மதிப்பு எவ்வளவு?

சக்கரம் என்பது பொன்னுல் ஆனதொரு நாணயமாகும்.

'கி.பி. 1784. படகில் வேலைக்காரனுக்குத் துறையில் இருந்து தண்ணீர் கொண்டுபோய் ஏற்றுவதற்கு 192 குழாய்கட்கு — சக்கரம் 4.8 பணம்
ஊர் சோல்சருக்கு — சக்கரம் $1\text{-}3/_{80}$ பணம்

ஆக சக்கரம் $6\text{-}1^{5}/_{80}$ பணம்

என்னும் ஆவணக் குறிப்பால்[1] 10 பணம் கொண்டது 1 சக்கரம் என்று தெரியவரும்[2]

'கி.பி. 1799 நெல் கலம் ஒன்றுக்கு $3^{1}/_{2}$ பணம் வீதம் 500 கலங்கட்குச் சக்கரம் 175' என்னும் மற்றுேராவணக் குறிப்பு[3] 10 பணம் கொண்டது ஒரு சக்கரம் என்பதனைக் காட்டுவதோடு 7 சக்கரத்துக்கு 20 கலம் (1 சக்கரத்துக்கு 2.95 கலம்) நெல் மதிப்பு இருந்தது என்பதனையும் காட்டுகின்றது.

அக்காலத்தில் நிலவிய நாணய வகைகள் மிகப்பலவாகும். இவற்றுள் பயில வழங்கியதொரு நாணயம் சக்கரம் எனலாம். சக்கரம் ஒன்று சுமார் ஆறு ரூபாய் மதிப்புடையது எனலாம்[4].

32 காசு கொண்டது ஒரு பணம்
2.5 பணம் கொண்டது — 1 சென்னப்பட்டணம் வெள்ளிப் பணம்.
4 வெள்ளிப்பணம் அல்லது 10 பணம் கொண்டது-1 சக்கரம்
4.5 சக்கரம் அல்லது 45 பணம் கொண்டது - 1 புலிவராகன்[5]
என்பது மராட்டியர் காலத்து நாணய மாற்றுமுறை ஆகும்.

---

1. மே.டி ஆவணம். த.ப.க. 1-180; 181.
2. தஞ்சை மராட்டிய மன்னர்கால அரசியலும் சமுதாய நிலையும் - பக். 149.
3. மே.டி. த.ப.க. 1 - 135.
4. தஞ்சை மராட்டியர் கால அரசியலும் சமுதாய நிலையும். பக்கம். 153-4
5. புலி - PHULI - FLOWERY -அழகுபடுத்தப் பெற்ற என்று பொருள். $4\,^{1}/_{2}$ சக்கரம் கொண்டது புலிவராகன் என்றதோடு அதில் சரிபாதி $2\,^{1}/_{4}$ சக்கரம் கொண்ட புலிவராகனும் வழக்கத்தில் இருந்தது. IBID. பக்கம் 150 and F.N.

சக்கரத்தின் பொன் மதிப்பு

சக்கரத்தின் மதிப்பினைப் பொன் மற்றும் வெள்ளியுடன் ஒப்பிட்டு நோக்குவோம்.

"கி.பி. 1769 - இல் 19 சக்கரம் = 1 சேர் (280GR) வெள்ளி" என்றும்[1] "கி.பி.1776 - இல் 16 சக்கரம் 4 பணம் = 1 சேர் வெள்ளி" என்றும்[2] தஞ்சை சரஸ்வதி மகால் ஆவணக்குறிப்பால் அறிகிறோம். (பின்னதில் விலை குறைவு) இவற்றால் 1 சக்கரம் கொண்டு 15 கிராம் முதல் 17 கிராம் வரை வெள்ளி வாங்க இயன்றமை பெறப்படுகிறது.[3]

1 சக்கரம் 1 பொன் மதிப்புடையது என்கிறது ஒரு ஆவணம்.

"கி.பி. 1776

தங்க முலாம் கொடுக்கத் தங்கம் $1\,^1/_2$ டாங்க். தோலா ஒன்றுக்கு 10 சக்கரம் 4 பணம் என்ற விகிதத்தில் 15.6 பணம்" என்னும் ஆவணக்குறிப்பால் 1 தோலா பொன் 10 சக்கரம் 4 பணம் என்பது பெறப்படும்.[4]

3 தோலா — 1 பலம்
8 பலம் — 1 சேர்

என்பது முன்னாளைய நிறுத்தலளவை வாய்பாடு.

பொன்னின் விலை முன்னாளிலும் அவ்வப்போது மாறி வழங்கியுள்ளது. பொன்னின் தரம் மற்றும் காலச் சூழலே இம்மாற்றங்களுக்குக் காரணமாகும்.

"கி.பி. 1813. தங்கம் 9 மாத்துள்ளது. வராகனெடை 1க்கு சக்கரம் $2\text{-}8\,^1/_8$ வீதம்"

"கி.பி. 1827. தங்கம் 8 மாத்துள்ளது. வராகனெடை 1க்கு சக்கரம் $2\,^{11}/_{28}$"

"தங்கம் 7 மாத்துள்ளது வராகனெடை 1க்கு $1\,^3/_4$ வீதம்" என்னும் குறிப்புக்கள்[5] 1 வராகனெடை (நகைத்) தங்கம் மாற்று மதிப்புக்கேற்ப $2.8^1/_8$ சக்கரம் முதல் $1^3/_4$ சக்கரம் வரை விலை மதிப்புப் பெற்றிருந்தமை பெறப்படும்.

இக்குறிப்புகளில் இருந்து

1 வராகனெடை தங்கம் சுமார் 2 சக்கரம்
1 தோலா தங்கம் சுமார் 10 சக்கரம்

மதிப்புடையதாக இருந்தமை அறியப்படுவதாகும். (35 gram சுமார் 30 சக்கரம்.)

---

1. மோடி ஆவணம். த.ப.க. 2-18
2. ச.ம.மோ.த. 29-3
3. தஞ்சை மராட்டிய மன்னர் அரசியல் சமுதாய நிலையும். பக் 388.
4. IBID பக்கம் 164-165 ம் அடிக்குறிப்பும் காண்க.
5. ச.ம.மோ.த. 10-19

தூய்மையான தங்கமான (24 காரெட்) பொள்ளல் தங்கம் 1 வராகனெடை 2.5 சக்கரம் மதிப்பின தாகவே இருந்துள்ளது.

"பொள்ளல் தங்கம் ஒரு வராகனெடை 2 - 4 $^{15}/_{16}$ சக்கரம்"
"பொள்ளல் தங்கம் 23 தோலா வாங்கினதற்கு 256 சக்கரம்."
என்னும் ஆவணக்குறிப்புகளின் மூலம்[1]

பொள்ளல் தங்கம் ஒரு வராகனெடை 2.4 $^{15}/_{18}$ சக்கரம்
பொள்ளல் தங்கம் ஒரு பலம் 33.39 சக்கரம்

என்பது அறியப்படும்.

**கனகாபிஷேகத்துக்குப் பொன்:**

இனி கனகாபிஷேகத்துக்கு அளிக்கப்பட்ட பொன் எவ்வளவு எனக் காண்போம். கனகாபிஷேகத்துக்கு அளிக்கப்பட்ட பொற் காசுகள் 500 சக்கரம். இப்பொருள் கொண்டு 31.2 சக்கரத்துக்கு 35 gram எனும் விகிதத்தில் 560.89 கிராம் பொன் (70 சவரன். இந்நாளைய விலை மதிப்புச் சுமார் 1.5 லட்சம் ரூபாய்) பெறப் பட்டதாதல் கூடும். தஞ்சை மன்னர் ஏகதேசமாகச் செய்த கனகா பிஷேகங்கள் இதே அளவில் நடைபெற்றன எனலாம்.

---

1. தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறும் சமுதாய நிலையும். பக்கம் 389.

# VII. ஸ்ரீ சந்திரசேகரேந்திரர் V க்குக் கனகாபிஷேகங்கள்.

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தின் 64 ஆவது ஆசார்யர்களாக இலங்கியவர் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் V ஆவர். இவர்களுடைய பூர்வாச்ரம ஜன்மக்ஷேத்ரம் கும்பகோண மாகும். பூர்வாச்ரமத்து வசிட்ட கோத்திரத்தினர். தஞ்சை நாயக்க அரசர் தம் அமைச்சரான கோவிந்த தீக்ஷிதரின் மூன்றுவது குமார ரான வெங்கடேச்வரமகிபதியின் மரபைச் சேர்ந்த வேங்கட சுப் பிரமணிய தீக்ஷிதரின் இளவல் இவர். [1] ஸ்ரீசந்திரசேகரர் ஸ்ரீமஹா தேவந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் 1813 ஜூலை மாதம் 22-ஆம் நாள் சந்நியாசாச்ரமம் பெற்றனர்.[2]

மும்முறை கனகாபிஷேகம்:

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கட்கு மூன்றுமுறை கனகாபிஷேகங்கள்[3] நிகழ்ந்துள்ளன.

முதலாவது 1833-இலும்

இரண்டாவது 1842-இலும்

மூன்றுவது 1848-இலும் நிகழ்ந்தவாறு சான்றுதாரங்களுடன் அறி யப்படுகிறது. இக்கனகாபிஷேகங்கள் மூன்றும் ஒவ்வொரு சூழலில் ஒவ்வொரு காரணம் கருதி நிகழ்த்தப்பட்டவை. இவற்றை ஏகதேச மாகச் செய்தவன் இரண்டாம் சரபோஜி மன்னனுவான்.

### 1. முதல் கனகாபிஷேகம் — கி.பி. 1833

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் கி.பி. 1813-ல் பீடாதிபத்யம் ஏற்றனர். இக்காலத்தில் மன்னனுக இருந்தவன் இரண்டாம் சரபோஜி யாவான். இவ்வரசன் ஸ்ரீமத்ஆசார்யாள் மாட்டுப் பெரும் பக்தியோ

---

1. Sankaracharya the great and his successors in kanchi – N. Venkataraman Ganesh & Co Madras. 1923. page. 102.

2. காஞ்சி ஸ்ரீ பெரியவர்களின் ஸ்ரீ பராபர குரு சுவாமிகளின் விருத் தாந்தம் — வடகோடி பிருந்தாவனம் டிரஸ்ட் கும்பகோணம் வெளியீடு — 1981 பக்கம் 9.

3. பூஜ்ய ஸ்ரீ பரமாசார்ய சுவாமிகட்கும் இவர்தம் பராபரகுரு ஸ்வாமிகள் போலவே மூன்று முறை கனகாபிஷேகங்கள் வெகு விமரிசையாக நடைபெற்ற செய்தி பக்தர்கள் ஒப்பிட்டறிந்து துதி செயற்பால தொன் றுகும்.

டிலங்கியவன்.[1] இவன் 8.3.1832-ல் இயற்கையெய்தினன். உடன் இவன் மகனான இரண்டாம் சிவாஜி அரசு கட்டில் ஏறினன். தஞ்சை மராட்டிய அரசர் வம்சாவளியில் இறுதியரசனான இவன் [2] ஸ்ரீ காமகோடி பீடாதிபர் மாட்டுப் பெரும்பக்தியோடிலங்கியவன் ஆவான்.

முதல் கனகாபிஷேகம் — *1833*

இரண்டாம் சிவாஜி தான் அரியணை ஏறிய முதலாம் ஆட்சியாண்டில் அதாவது 1832-3 இல் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளைத் தரிசிக்கத் தன் உரிமைச் சுற்றத்தினருடன் கும்பகோணம் வந்தான். கி.பி. 1833-ல் முதன்முதலாகப் பூஜ்ய ஸ்ரீ பெரியவாளைத் தரிசித்த மன்னவன், ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு ஒரு கனகாபிஷேகம் செய்தனன்.

ஆவணக் குறிப்பு

சகர்சூண் ஆண்டு 1234 க்குரிய அரண்மனைச் செலவு கணக்குக் குறிப்பு ஒன்று கி.பி. 1733-இல் கும்பகோணம் ஸ்ரீமடத்தில் ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு நடைபெற்ற இக்கனகாபிஷேகத்தைக் குறிக்கும்.

**“ராஜஸ்ரீ மஹா ராஜா அவர்கள் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமி மடத்துக்கு சவாரி போனதும் கனகாபிஷேகம் செய்ததும் சக்கரம் 500 கொடுத்ததும்”** என்பது ஆவணக் குறிப்பு.[3]

சிவாஜி முதன்முறை தரிசித்தமை காரணமாக இக் கனகாபிஷேகம் ஆற்றினன் எனலாம். அத்துடன் 500 சக்கரம் பாத காணிக்கையாகக் கொடுத்ததாகவும் இதனுள் உள்ளது [4] கூர்த்தறிதற்பலதாகும்.

---

1. ஸ்ரீமத ஆசார்யாள் புதுசாய்ப் பட்டமேற்றதும் மேற்கொண்ட பட்டணப் பிரவேஸத்தின் போதும், மற்ற யாத்திரைகளின் போதும், வியாச பூஜை காலங்களிலும் இவன் செய்த மரியாதைகளும், மாமூல் ஏற்பாடுகளும் இவன் கொண்டிருந்த பக்தி சிரத்தையைக்காட்டுகின்றன.

2. இரண்டாம் சிவாஜி பற்றிய சில குறிப்புகள்: இரண்டாம் சரபோஜிக்கும் அவரது இரண்டாவது மனைவி அகல்யாபாயிக்கும் சிவாஜி பிறந்தார். பிறந்த தேதி 1808 மாசி. 23. மார்ச் 22-ல் சிவாஜி என்று நாமகரணம். செப்டம்பர் 30 அன்னப்ராசனம். குடுமி கல்யாணம், முதலியன 1811-ல் நடந்தது. முதல் கலியாணம் 1818. மனைவி சைதம்பாபாயி. 1828-இரண்டாம் திருமணம். காமாக்ஷி அம்பாபாய் 1852ல் ஒரே நாளில் சிவாஜி 12 பெண்களைத் திருமணம் செய்து கொண்டமை (வாரிசு இன்மை காரணம்) இவர் பட்டத்துக்கு வந்த பிறகு வெள்ளையர் கருத்துக்கு ஏற்ப நடந்து கொள்ளவில்லை. 1855-அக்டோபர் 25 திங்கட்கிழமை காலமானர் — தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் பக்கம் 31—4 காண்க.

3. ச.ம.மோ.த. Vol 5 பக். 6

4. 1. மடத்துக்குப் போனது. 2. கனகாபிஷேகம் செய்தது. 3. 500 சக்கரம் கொடுத்தது. உம்மைகள் எண்ணும்மைகள் ஆதல் அறிதற்பாலது.

## 2. இரண்டாம் கனகாபிஷேகம் — 1842

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகட்கு இரண்டாம் சரபோஜி கி.பி. 1842-ல் இரண்டாவது தடவை கனகாபிஷேகம் செய்தான். இக்கனகாபிஷேகத்துக்கான சூழலை நோக்குவோம்.

### ஆசார்யாளின் விஜயயாத்திரை

காஞ்சிப் பெரியவர் கி.பி. 1838-ல் நடைபெற்ற மஹா மகத்தின் போது குடந்தையில் உறைந்தனர். அதன்பின்னர் 1839 முதல் 1841 வரையிலான மூன்றாண்டுக்காலம் விஜய யாத்திரை மேற்கொண்டனர். இவ்வியாத்திரை பல சமயப் பணிகளைச் சாதித்ததொரு யாத்திரை யாகும். இவ்வியாத்திரை விவரங்களை ஸ்ரீ பராபர குருவிருத்தாந்தம் பின்வருமாறு கூறும்.

### காஞ்சியில் ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலய ஜீர்ணோத்தாரணமும் கும்பாபிஷேகமும்

காஞ்சி க்ஷேத்ரத்தில் நடுநாயகமாக விளங்குவதும் ஸ்ரீ காமகோடி பீடத்துடன் இணைந்ததுமான தேவி ஸ்ரீ காமாக்ஷியின் ஆலயத்தில் கர்ப்பக்ரஹம் முதலிய சில பகுதிகள் செப்பனிட வேண்டிய நிலை யிலிருந்த விஷயமறிந்த பராபரஸ்குருவாமிகள், அம்பிகையின் கோயிலை ஜீர்ணோத்தாரணம் செய்து, கும்பாபிஷேகமும் நடத்தத் தீர்மானித்துக் கும்பகோணமிருந்து காஞ்சீபுரத்திற்கு யாத்திரை செய் யத் திட்டமிட்டார்கள்.

ஸ்ரீ காமாக்ஷி அம்பாளின் கர்ப்பக்ரஹம் முதலிய முக்யப் பகுதிகளுக்கு ஜீர்ணோத்தாரணம், கும்பாபிஷேகம் முதலியன செய் விப்பது ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் பரம்பரை பாத்யதை. இதனை அறிந்திருந்த அக்காலத்து ஆங்கிலக் கம்பெனி அரசாங்கமும் ஜீர்ணோத்தாரண கும்பாபிஷேகத்தில் சிரத்தை கொண்டது. நம் பராபர குருஸ்வாமிகள் கும்பகோணம் விட்டுக் கிளம்பு முன்னரே, மேற்படி ஆலயத்தில் நடைபெற வேண்டிய கார்யங்களின் செல வுகளுக்காகச் செங்கல்பட்டு ஜில்லா கலெக்டர், காஞ்சீபுரம் தாசில்தார் ரூ. 3500/- ஹுசூர் கஜானாவிலிருந்து பெற்றுக்கொண்டு, ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடாதிபதியான ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் சீக்கிரமாக வந்து சேரும்படி ஏற்பாடு செய்து கொண்டும், மராமத்து வேலைகள், அஷ்டபந்தனம், கும்பாபிஷேகம் முதலான கார்யங்களை முறைப்படி நடப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படிக்கும் மேற்படி தாசில் தாருக்கு 1839-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 25-ஆம் தேதியில் உத்தரவு அனுப்பினர். இப்படி அளிக்கப்பட்ட ரூ. 3500, தற்கால மதிப்பின்படி, அக்காலத்திய நெல்லின் விலையையும் தற்கால நெல் விலையையும் ஒப்பிட்டுப் பார்த்தால், ஏழு லக்ஷம் ரூபாய்க்கு ஸம மெனலாம்.

ஸ்ரீ பராபரகுருஸ்வாமிகள் விளம்பி வருஷம் பங்குனி மாதம் 28-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை முன் இரவு கும்பகோணம் விட்டுப் புறப்பட்டார்கள். (April, 1839). அன்று இரவே திருவிடைமருதூரை யடைந்து, அவ்வூர் அரண்மனையில் வாழ்ந்த அரசவம்சத்தினரால் வரவேற்கப்பட்டு, கோயிலருகேயுள்ள, வள்ளல் பச்சயப்ப முதலி யாரின் மனைவியினுல் முற்காலத்தில் கட்டிக் கொடுக்கப்பட்ட, காம கோடி பீடத்தின் மடத்தில் தங்கினுர்கள். இரண்டு தினங்கள் அங்குத் தங்கி, பின்னர் கிரமமாக மாயூரம், வைத்தீச்வரன் கோயில், சீர்காழி முதலிய புனிதத்தலங்களில் முகாமிட்டு, தேவாலயங்களில் தர்சனம் செய்துகொண்டு, விகாரி வருஷம் சித்திரை மாதம் 10-ஆம் தேதி காலையில் சிதம்பரம் ஸ்ரீ சித்ஸபேசனுன ஸ்ரீ நடராஜ மூர்த்தியையும், ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளையும் தரிசித்து, எல்லாக் கோயில் மரியாதைகளையும் பெற்று, நான்கு தினங்கள் அவ்வூரிலேயே தங்கி யிருந்தார்கள். இப்படி யாத்ரை மார்க்கத்தில் விஜயம் செய்த ஊர்களில் அவ்வவ்வூர் மக்கள் ஸ்ரீ சந்த்ரமௌளீச்வர பூஜை முதலான எல்லாக் கைங்கர்யங்களையும் செய்து வைத்தனர். சித்திரை மாதம் 14-ஆம் தேதி சிதம்பரத்திலிருந்து புறப்பட்டுப் பரங்கிப்பேட்டையை யடைந்தார்கள். பரங்கிப்பேட்டையில் முகாம் ஜாகையில், ஸ்ரீ ஆசார்யாள் இறங்கும் போது கப்பலிலிருந்து குண்டு வேட்டுப் போடப்பட்டு அரசாங்க மரியாதை செய்யப்பட்டது.[1] *(சித்திரை-15உ)*

பிறகு திருப்பாப்புலியூர் வழியாகப் புதுச்சேரி சென்று சில தினங்கள் தங்கி அவ்வூர் மஹாஜனங்களின் ஸத்காரியங்களை ஏற்று, வைகாசி மாதம் இரண்டாம் நாள் காலை ஸ்ரீ ஸ்வாமிகள் யாத்திரை புறப்பட்டபோது, புதுச்சேரி ஆளுனரின் உத்திரவுப்படி தம்பூறு, புல்லாங்குழல் முதலிய வாத்ய கோஷங்களுடன் ராணுவத்தினர் நகர எல்லைக்கப்பால்வரை வந்து சுவாமியாரவர்களிடம் உத்திரவு பெற்றுப்போனுர்கள். வளவனூர், விழுப்புரம், திண்டிவனம், வந்த வாசி முதலிய பல ஊர்களில் முகாமிட்டுக் கொண்டு, காஞ்சீபுரம் எல்லையையடைந்தபோது, (வைகாசி மாதம் 13-ஆம் தேதி), தேவஸ் தான மரியாதைகளுடன் காஞ்சீபுரம் நகரவாசிகளால் வரவேற்கப் பட்டபின், ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் கோயிலுக்குச் சென்ற ஸ்ரீ ஸ்வாமிகள், அம்பிகையையும், பகவத்பாதாசார்யாள் முதலிய ஸந்நிதிகளிலும் தர்சனம் செய்து கொண்டு எல்லாவிதமான மரியாதை களையும் பிரஸாதங்களும் பெற்றுக், கங்கைகொண்டான் மண்டபத்தின் அருகேயுள்ள தமது மடத்திற்குச் சென்று தங்கினுர்கள். மறுதினம் ஸ்ரீ ஏகாம்பரேச்வரர் தர்சனம் முடித்துக்கொண்டு, சின்னக் காஞ்சீ புரத்திலுள்ள ஸ்ரீ வரதராஜஸ்வாமி தர்சனம் செய்து, அங்கு ஆனை கட்டித் தெருவிலுள்ள காமகோடிமடத்தில் சிறிது தங்கி, மறுபடி பெரிய காஞ்சீபுரம் மடத்தை அடைந்தார்கள். சிறிதுகாலம் அங்கேயே

---

1. இப்படி வழக்கிலிருந்த பீடத்திற்குரிய மரியாதை பிற்காலத்தில் பிரிட்டிஷாரின் நேரிட்ட ஆட்சி ஏற்பட்டபின், குண்டு மரியாதைக்குரிய பலருக்கும் இம் மரியாதை நிறுத்தப்பட்டபோது, நிறுத்தப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகின்றது.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரஸ்வாமி ஆராதனம் முதலியன நடத்திக்கொண்டு தங்கியிருந்தார்கள். விகாரி வருஷம் ஆனி-மீ 12-ஆம் நாள், ஸ்ரீ காமாக்ஷி அம்பாளின் பாலாலய ஸ்தாபனம், கலாகர்ஷணம் முதலியவை ஸ்ரீ ஆசார்யர்களால் செய்து வைக்கப்பட்டது. ஆலயத் திருப்பணி மராமத்து வேலைகளும் ஆரம்பிக்கப்பட்டன.

பெரிய காஞ்சீபுரம் மடத்தில் தங்கியிருந்த காலத்தில் ஸ்ரீ ஸ்வாமி பூஜாதி கார்யங்களுக்கான நேரம் போக, எஞ்சிய பெரும்பாலான பொழுது, ஸ்ரீ காமாக்ஷியம்பிகையின் ஸந்நிதியில் ஸ்ரீ ஸ்வாமிகள் நிஷ்டையிலிருந்து வந்தார்கள். தேவீ பூஜையிலும், தேவீத்யானத்திலும் அநேகமாக எப்பொழுதுமே ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு விளங்கினவர்கள் இந்த ஆசார்ய ஸ்வாமிகள். அம்பிகையின் ஆலய மராமத்துத் திருப்பணிக்கு அதிகமான பொருள் தேவையாயிற்று. பெருந்தொகைத் தேவையைச் சமாளிக்கச் சென்னப்பட்டணம் யாத்திரை செய்தல் உதவியாக இருக்குமென்ற எண்ணத்துடன், கலாகர்ஷணம் செய்யப்பட்டுச் சில தினங்கள் கழிந்தபின், காஞ்சிக்கருகிலுள்ள அம்பிகாபுரம்[1] எனப்படும் கீழம்பி கிராமத்திலுள்ள காமகோடி பரம்பரையில் பீடாதிபதியாக விளங்கிய பூர்வாசார்யர்களின் அதிஷ்டானத்தைத் தர்சனம் செய்துகொண்டு, விகாரி வருஷம், ஆனி மாதம் 21-ஆம் நாள் சென்னை யாத்திரையைத் தொடங்கினார்கள்.

ஸ்ரீ மடம் கிராமம் தம்மனூர் போன்ற சில ஊர்களில் முகாமிட்டுச், சில தினங்களில் சென்னை நகரம் சேர்ந்தார்கள். ஸ்ரீ பராபரகுரு ஸ்வாமிகள். அக்காலத்தில் சென்னை ஒரு வளரும் நகரம். ஸ்ரீ ஆசார்யாள் அப்பெருநகரில் முகாமிட்டிருந்த இடம் அப்போது சென்னைக் கோட்டையைச் சூழ்ந்திருந்த கோட்டை மதில் சுவற்றிற்குட்பட்ட பகுதியில் அமைந்திருந்தது. இன்றைய சென்னை மாநகரத்தில், தம்புச் செட்டித் தெருவில், காமகோடிபீடத்திற்குரியதாய் ஒரு மடம் உள்ளது. இங்குள்ள ஒரு கல்வெட்டிலிருந்து, இது இன்றைக்குச் சுமார் 234 வருடங்களுக்கு முன்னரே (அதாவது ஸ்ரீ பராபரகுரு ஸ்வாமிகள் சென்னையில் முகாமிட்டிருந்த காலத்திற்குச் சற்றேறக் குறைய ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு முன்னரே) இப் பீடத்திற்கு ஏற்பட்டிருப்பதாகத் தெளிவாகின்றது. சென்னை மஹாஜனங்களான சிஷ்யகோடிகள் சிறப்பாகப் பூஜை முதலிய உபசாரங்களை நடத்தி வந்தார்கள். இப்படிப் பல தினங்கள் கழிந்தன. ஒருநாள் நள்ளிரவில்

---

1. இந்த அம்பிகாபுரம் பற்றிய செப்பேடு ஒன்றுள்ளது. அது விஜய கண்ட கோபால தேவன் என்ற ஆந்திர சோழனுடையது. அதிலிருந்து இந்தக் கிராமம் காமகோடிபீட பூர்வாசார்யர்களுக்கு வழங்கப்பட்டதெனத் தெரிகின்றது. மேலும் அம்பிகாபுரம் கிராமத்திலுள்ள சிவாலயத்தில் உள்ள விஜயநகரமன்னன் கிருஷ்ணதேவராயரது காலத்திய கல்வெட்டொன்றிலிருந்து (1514–A.D.) இக்கிராமம் காமகோடி பீடத்தின் பரம்பரை அனுபவத்திலிருந்து வருகின்றதெனப் புலனாகின்றது. (இன்றுமனுபவத்திலுள்ளது)

ஸ்ரீ ஆசார்யாளுக்கு ஏற்பட்ட கனவில், ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் தோன்றி, ஸ்வாமிகளின் கையைப் பற்றித் தன்தலைக் கேசபாசங்களில் (தலை முடிக்கத்தைகளில்) வைத்து, "என் தலைமயிர்கள் எண்ணை யில்லாது சடையாய் போய்விட்டதைப்பார் பாலாலயம் பண்ணிய பின் எத்துணை நாள் தைலாபிஷேகம் இல்லாமல் இருப்பது? உனக்கு ஜீர்ணோத்தாரண கைங்கர்யத்திற்குப் பணம் தேவைப்பட்டால், என்னைக் கேட்டால் கொடுக்கமாட்டேனா?" எனக் கூறிவிட்டு மறைந்தனள்.

கனவில் வீசிய ஒளியினால் உடன் விழித்த ஆசார்ய ஸ்வாமிகள், அப்போதே காஞ்சீபுரத்துக்குப் புறப்பட வேண்டுமென மடத்து அதிகாரிகளை எழுப்பச் செய்து உத்திரவிட்டார்கள். தம் உத்தேசத்தைச் செல்வாக்குடைய சில பக்தர்களுக்குச் சொல்லியனுப்பினார்கள். அக் காலத்தில் சென்னைக்கோட்டை வாயிலின் கதவுகள் முன்னிரவில் பூட்டப்பட்டு, விடியற்காலையில்தான் திறக்கப்படுவது வழக்கம். ஸ்ரீ ஸ்வாமிகளின் அபிப்பிராயத்தை அறிந்த கிழக்கிந்தியக் கம்பெனி பிரதான அதிகாரிகளின் உத்திரவுப்படி கோட்டை வாயிற்கதவுகள் காப்பாளர்களால் திறந்து விடப்பட்டன. பக்தர்களால் மாற்று போகி களுக்கு (பல்லாக்குச் சுமப்பவர்களுக்கு) ஏற்பாடு செய்யப்பட்டது. பொழுது புலர்வதற்கு வெகு நேரம் முன்னதாகவே சென்னபட் டணத்தை விட்டு ஸ்வாமிகள் கிளம்பிவிட்டார்கள். சென்னையிலிருந்து சுமார் 40 மைல் தொலைவிலுள்ள காஞ்சியைச் சீக்கிரமாகச் சென் றடைந்தார்கள். அன்றே அம்பிகையைத் தரிசித்துத் தாரை தாரை யாகக் கண்ணீர் சொரிந்தார்கள்.

சில தினங்கள் கழிந்தன. பணமும் பொருள்களும் முயற்சியின்றி, வந்து குவிந்தன. மராமத்து வேலைகளும் விரைவில் செய்து முடிக் கப்பெற்றன. கும்பாபிஷேகத்திற்கு நாள் திட்டமிடப்பட்டது. இரயில், பஸ் போன்ற போக்குவரத்து வசதிகள் ஏதுமில்லாத அக்காலத்தில், ஏராளமான பக்தர்கள், கும்பாபிஷேகத்தைத் தரிசிக்க, முன்னதாகவே பல பகுதிகளிலிருந்து வந்து குழுமிவிட்டனர். கும்பாபிஷேகத்தை முன்னிட்டு கோலாஹலமாக விசேஷ வித்வத் ஸதஸ் ஆரம்பிக்கப்பட்டு செவ்வனே நடக்கலாயிற்கு. வாகன வசதிகளே மிகக் குறைவான காலமாயினும் பல சிறந்த வித்வான்கள் மைஸூர் முதலிய பல பகுதிகளிலிருந்து வந்து ஸதஸில் பங்கு கொண்டனர்.

கும்பாபிஷேக வித்வத்ஸதஸில் கலந்துகொண்ட புகழ் பெற்ற பல வித்வான்களில் மைஸூர் ஸ்மஸ்தானத்திலிருந்து விஜயம் செய் தவர்களுள் முக்யமானவர்கள், குனிகல் ராமா சாஸ்திரிகள், மைஸூர் ஸமஸ்தான தர்மாதிகாரியாகத் திகழ்ந்த திருவிசநல்லூர் குட்டி சாஸ் திரிகள் ஆகியவர். குனிகல் ராமா சாஸ்திரிகள், ஸமீபகாலத்தில் ச்ருங்கேரி மடாதிபதிகளாக விளங்கிய ஸ்ரீ சந்த்ரசேகர் பாரதீ ஸ்வாமிகளின் குருவான ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபினவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரமத் தந்தை. அக்காலத்தில் சாஸ்திரிகள் பல்லக்கில் செல்லும் அவருக்குப் பல சிஷ்யர்கள் சாமரம் வீசிக்

கொண்டு செல்வர் இப்படி சாமரம் போட்டுக் கொண்டு செல்வோரில், ந்யாய பாஸ்கர க்ரந்தமியற்றிய மங்களூர் அனந்தாழ்வார், குறிச்சி ரங்காச்சார்யார், சோகத்தூர் விஜயராகவாச்சார்யார் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்.

மைஸூர் தர்மாதிகாரி குட்டி சாஸ்திரிகள் கும்பகோணத்தை அடுத்து, காவிரியின் வடகரையிலுள்ள திருவிசநல்லூரைச் சேர்ந்தவர். இவர் 'மஹிஷசதகம்' என்ற ச்லேடைக் காப்பியமிற்றிய வாஞ்சேச்வர கவியின் கொள்ளுப் பேரன். இவர் தஞ்சை மன்னன் சரபோஜி, திருவிடை மருதூர் அமரஸிம்ஹ ராஜா, பூனு பேஷ்வா பாஜி ராவ் (2வது)' மைஸூர் ராஜ்யாதிபதி பண்டைக் கிருஷ்ணராஜ உடையார், மற்றும் ஜமகண்டி, ராம்துர்க், ஸாங்க்லி போன்ற ஸம ஸ்தானுதி பதிகளின் அவைகளில் ஆஸ்தான பண்டிதராக விளங்கியவர். ச்ருங் கேரி ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபினவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளின் குருவான ஸ்ரீ உக்ர நரஸிம்ஹ பாரதிகள், அவருடைய பூர்வாச்ரமத் தில் காசியில் இருந்த காலத்தில் (மற்றும் பலருடன்) குட்டி சாஸ்திரிகளிடம் ஸூத்ரபாஷ்யம் படித்துச் சாந்திபாடம் செய்தவர்.

இக்கும்பாபிஷேகம் விகாரி வருடம் தை மீ பததாம் தேதி (22 JANUARY 1840) அன்று ஸ்ரீமத் ஆசார்யாளால் சிறப்புற நடத்தப்பட்டது.

*சாசனச் சான்றும் சாற்ருணாப் புகழும்*

ஸ்ரீ காமாக்ஷியம்மன் ஆலயத்தில் உள்ள கல்வெட்டு ஸ்ரீமத் ஆசார்யாள் ஆற்றிய இக்கும்பாபிஷேஆகம் பற்றிக்கூறும். சமஸ்கிருதச் செய்யுளாலும் தெலுங்கு மொழியாலும் இயன்ற கல்வெட்டு இது. இதனுள்

"काञ्ची श्रीनिकटप्रसिद्ध सुमहासर्वज्ञपीठाधिपैः ।
वेदोक्तस्मृतिसिद्धशिष्टविमलाचारप्रतीपादकैः ।।
श्रीमहादेवयोगीन्द्र पूर्णानुग्रहभाजनैः ।
श्रीचन्द्रशेखरेन्द्राख्यैः कुम्भघोणात्समागतैः ।।
कामकोटिपीठाधीशैः दृढीकृत्यालयं मुदा ।
कुम्भाभिषेकः कामाक्ष्या जीर्णोद्धारः कृतः शुभः ।।" என்றுள்ளதும்

சாலிவாஹன சகாப்தம் 1761-ஆம் ஆண்டு விகாரி ஸூ, புஷ்ய மாஸம் (தை மாதம்) பஹுள தசமியும், புதவாரமும் கூடிய சுபதினத்தில், ஸ்ரீ காஞ்சீகாமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸ்வாமி கும்பகோணத்திலிருந்து காஞ்சிக்கு விஜயம் செய்து, ஸ்ரீ காமாக்ஷி அம்பிகையின் ஆலய ஜீர்ணோத்தாரணமும், கும்பாபிஷேகமும் செய்து மகிழ்ச்சி அளித்தார்-சுபமஸ்து." என்னும்

---

1. ஸ்ரீபாாபர குரு விருத்தாந்தம் — பக்கம் 18-19க்கிடைப்பகுதி.

தெலுங்குப் பகுதி சாரமும். "விகாரி நாமசம்வத்சரம் ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடாதிபதுலைன ஸ்ரீ சந்த்ரசேகர ஸ்வாமுல வாரு கும்ப கோணமுனிச்சி கன்சிகி வொச்சி" என்னும் தெலுங்குப் பகுதியும் அறிதற்பாலன.

ஸ்ரீமத் ஆசார்யாள் ஸ்ரீ காமாக்ஷி அம்மனுக்குத் திருப்பணி ஆற்றியமையும் ஸ்ரீசக்ரப்பிர திஷ்டை புரிந்தமையும் ஸ்ரீ காமகோடி பீடத்துக்குத் தென்னகமெங்கும் பெரும் புகழீட்டித் தந்தது. இச் செய்தியை, ஸ்ரீ காஞ்சிகாமாக்ஷி அம்மனுக்குக் கும்பாபிஷேகமும் ஸ்ரீ சக்கரப் பிரதிஷ்டையும் செய்த கீர்த்திக்கும்" என்னும் தஞ்சை சரஸ்வதி மஹால் ஆவணக்குறிப்பாலும்[1] இதனை அறியலாம்.

கனகாபிஷேக நிகழ்ச்சி

இவ்வரிய நிகழ்ச்சியைச் சாதித்து ஜகத்குரு ஸ்ரீமத் ஆசார்ய சுவாமிகள் குடந்தை திரும்பினர். ஸ்ரீ காமகோடி பீடாதிபர் மீதும் ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ காமாக்ஷி அம்மன் பேரிலும்[2] பெரும்பக்தி கொண்ட மரபினான இரண்டாம் சிவாஜி பூஜ்யஸ்ரீ பெரியவாளுக்குப் பெரும் வரவேற்பளித்தனன் எனலாம். அதன்பின் இவன் 1842-இல் தன் உரிமைச்சுற்றமும் அரசியல் அலுவலரும் புடை சூழக் கும்பகோணம் ஸ்ரீமடத்துக்குச் சென்று ஸ்ரீமத் ஆசார்யாளைத் தரிசித்தனன்; கனகா பிஷேகம் செய்தனன்.

*"சகர் சூன் ஆண்டு 1243.*
*ராஜஸ்ரீ திவான் சாகேபு (சிவாஜி) ஸ்ரீசங்கராச்சார்ய சுவாமிகள் ஸ்ரீமடத்துக்கு விஜயம் செய்தமை; கனகாபிஷேகம் மற்றும் பூஜைக்கு 500 பொற்காசுகள் அளித்தமை"*

என்பது ஆவணக் குறிப்பு. இதனால் விஜயயாத்திரைகள் மேற்கொண்ட பின்னர் ஒருநன் முகூர்த்தத்தில் ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு இக்காவலன் கனகாபிஷேம் கண்டமை பெறப்படும்.

### 3. மூன்றும் கனகாபிஷேகம். — 1848

ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு நடைபெற்ற மூன்றுவது கனகாபிஷேகம் கி.பி. 1848-ல் தஞ்சையில் மிக விமரிசையாக நடைபெற்றது. இது ஸ்ரீமத் ஆசார்யாளின் 25-ஆவது அருளாட்சியாண்டில் நடந்தது என்பதும் மற்றொரு சிறப்புச் செய்தியாகும். இக்கனகாபிஷேகம் நிகழலான சூழலைக் காண்போம்.

---

1. தஞ்சை சரஸ்வதி மஹால். மோடி ஆவணத்தொகுதி 8.பக்கம் 21. 160C 8ல் 6.

2. ஸ்ரீமத் ஆசார்யாளுடன் தஞ்சைக் கெழுந்தருளிய ஸ்ரீபங்காரு காமாக்ஷிக் குத் தஞ்சையரசர் தனித்திருக்கோயில் எடுத்து வழிபட்டமையும், தம் செப்பிதழ்களில் 'ஸ்ரீகாமாக்ஷி சகாயம்' என்று குறிப்பிடுதலும் ஸ்ரீகாமாக்ஷி மாட்டு இவ்வமிசத்தவர் கொண்டிருந்த பக்தித்திறத்தைக்காட்டுவது.

தாடங்கப் பிரதிஷ்டை

திருச்சியைச் சூழ அமைந்த திருத்தலங்களுள் ஒன்று திருவானைக்கா. இது பாடல் பெற்ற காவிரி வடகரைத் திருத்தலங்களுள் ஒன்று பஞ்சபூத க்ஷேத்ரங்களில் ஒன்றாகவும் இலங்கும். இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ அகிலாண்டேச்வரியின் திருக்காதுகளில் ஸ்ரீ ஆதிசங்கரர் தாடங்கங்களைச் சார்த்துவித்தது உலகறிந்த செய்தி[1]

தாடங்கம் — காதணிகள். இக்காதணிகள் மந்திர பூர்வமாக அமைவன. ஸ்ரீசக்கர ரூபமாக அமைவன. இவற்றை ஸ்ரீ அகிலாண்டேச்வரி திருக்காதுகளில் அணிவித்தல் தாடங்கப்பிரதிஷ்டை எனப் பெறும். ஸ்ரீசங்கரர் சார்த்திய இத்திருக்காதணிகளைப் பிரதிஷ்டிக்கும் உரிமை காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் வழிவழி யுரிமையாக இருந்தது.[2] சென்ற நூற்றாண்டில் இத்தாடங்கங்கள் ஜீரணமடைந்தும் சிதிலமாயும் இருந்தன. ஸ்தானிகர் முதலியோர் ஸ்ரீ காமகோடி பீடாதிபரை அணுகி வேண்டிக் கொண்டனர். அவர்தம் வேண்டு கோட்கிணங்கி ஸ்ரீமத் ஆசார்யாள் திருவானைக்காவலுக்கு எழுந்தருளினர்.

---

1. உலகில் துட்ட தேவதையை உன்னி ஆரா தனம்புரிந்தார்
நலமார் தேவ சந்நிதியின் நடுங்கும் உக்ர கலைமீறிப்
பலரும் அங்குச் செலப்பயந்த பதிகள் பலவின் ஒன்றாகும்.
நலமாம் ஜம்பு கேச்வரத்தில் தங்கும் அகிலாண்டேச்வரியாம்.

அம்மை கொடுமை கண்டஞ்சி யாரு மெதிரில் செல்லார்கள்
எம்மை யாளும் குருநாதர் இபமா முகனை எதிரிலிட
இம்மை மறுமை உலகனைத்தும் ஈன்று காத்துத் துடைத்தருளும்
கொம்மை நகிலாள் தன் கலையைக் குறைத்தாள் எதிரில் குறுகினார்.

அந்தக் கலையைக் கிரகித்தவ் வம்மை செவிகட் காதனமாம்
சந்தமான தாடங்கம் செய்வித் தாசான் சார்த்தினார்
இந்த நாளும் தாடங்கத் திமய வல்லி இயங்குவாள்
சொந்த மாகும் இதுவன்றிப் பூஜை இலையே சுந்தரிக்கே.

அதிலோர் பின்ன மாவதேல்
காமகோடி பீடத்தின்
பதிகளாவார் செய்வித்தப்
பரைக்குச் சார்த்தும் பண்புடைய
விதிய தாகும் வேறொருவர்
விரும்பிச் சார்த்தற்கொண்ணாது

—1 ஸ்ரீ சங்கர விஜய சிந்தாமணி — துரைசாமி சோழகர்யாத்தது. 8 ஆவது அத்யாயம். பாடல் 17-20.

2. நான்காம் சந்திரசேகரர் ஈச்வர வருடம் (1758) புரட்டாசி 29 ஆம் நாளில் தாடங்கப் பிரதிஷ்டை செய்தமை தஸ்தாவேஜுகளால் பெறப் படுவது. காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் முக்யதஸ்தாவேஜுகள் பாகம் 1. பக் 61, 80, 93ல் உள் நெம்பர் 222, 229. தீர்ப்பு பக்கம். 103-ல் பாரா. 8.

கி.பி. 1844-இல ஸ்ரீமத் ஆசார்யாள் திருவானைக்கா சென்றவுடன் தாடங்கப் பிரதிஷ்டை தொடர்பான பணிகளைத் தொடங்கினர். இது கண்டு ஆற்ருத ச்ருங்கேரி ஸ்ரீமடத்தினர், ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் தாடங்கப் பிரதிஷ்டை செய்யக்கூடாது என்னும் நோக்கத்துடன் பலப்பல இடைஞ்சல்கள் செய்தனர்; வழக்குத் தொடுத்தனர். ச்ருங்கேரியார் தந்த இடைஞ்சல்களையெல்லாம் மீறி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் தாடங்கப்பிரதிஷ்டையைப் பெரும் பொருட்செலவில் 1844 அக்டோபர் மீ 27 ஆம் தேதி துவங்கினர்.[1]

ச்ருங்கேரி ஸ்ரீமடத்தார் தாடங்கப்பிரதிஷ்டை பாதயதை தமக்கே உரியது என்பதில் மிகத் தீவிரமாக இருந்தனர். திருச்சிராப்பள்ளி பிரின்சிபல் ஸதர்அமீன் கோர்டில் வழக்குத் தொடுத்தனர். ஸ்ரீ காமகோடி பீடத்தினர் எதிர் வழக்காட வேண்டிய நிலை ஏற்பட்டது. இருதரப்பினரும் மிகப்பல தஸ்தாவேஜுகளைக் கோர்ட்டில் தாக்கல் செய்தனர். தீர்ப்பில் நீதிபதி வாதிச்ருங்கேரி மடத்தினர் சார்பில் ஆஜர்ப்படுத்தப்பட்ட சாக்ஷிகளின் வயது அவர்களின் சாக்ஷியம் மற்றும் அவர்களுடைய தரப்புக்கு ஆதாரமாகத் தரப்பட்ட தஸ்தாவேஜுகள் எல்லாம் சரியானதாகவும் ருகவானதாகவும் இல்லை என்று தீர்ப்பு செய்து ச்ருங்கேரியார் தொடுத்த வழக்கினைத் தள்ளுபடி செய்தனர். அதன்பின்னரும் ச்ருங்கேரியினர் அப்பீல் முயற்சிகளில் ஈடுபட்ட வண்ணமிருந்தனர். 1844ல் தொடங்கிய இவ்வழக்குகள் 1948 OCT 30 ஆம் நாள் முடிவுக்கு வந்தன.[2]

### தஞ்சையில் கனகாபிஷேகம்

தாடங்கப்பிரதிஷ்டை காலத்தில் ச்ருங்கேரியார் விளைவித்த தடை முயற்சிகளால் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகட்கு எதிர்பாரத பெரும் பொருட்செலவு ஏற்பட்டது.[3] அதன்பின் 1848-ல் தாடங்கப் பிரதிஷ்டை செய்து தஞ்சை திரும்புங்கால் தஞ்சையில் கனகாபிஷேகம் நிகழ்ந்தது. இக்கனகாபிஷேகம் பற்றிய விவரங்கள் வருமாறு:

1. அப்பொழுது அவவிடத்தை சத்ருபக்ஷத்தின் பிராபல்யத்திஞல் ஒரு நாள் நடுவில் இருந்தது. ஆனுல் காரியத்துக்கு இடைஞ்சல் ஏற்படும் படி இருந்தது. உடனே அங்கேயே செலவுக்கு வேண்டிய துகையைக் கடன் வாங்கி- ஜீர்ணோத்தாரண பிரதிஷ்டையைச் செய்து ஸ்ரீ சுவாமிகள் அம்மனுக்குத் தாடங்கத்தை அர்ப்பணம் செய்தார். தஞ்சை சரஸ்வதி மஹால் மோடி ஆவணம் - தொகுதி 8. பக்கம் 21. 160C 8ல் 6.

2. இவ்வழக்குப் பற்றி SOME PRINCIPAL DOCUMENTS RELATING TO SRI KANCHI KAMAKOTI PEETADHIPATHI JAGED GURU SRI SANKARA CHARYA SWAMIGAL MUTT-Vol. I (1955) என்னும் நூலிஞல் விரிவாக அறியப்பெறும்.

3. "-இங்குத் தாடங்கப் பிரதிஷ்டை செய்ததஞல் மடத்துக்கு ரூ 5000 கடனாயிற்று. தவிர பிரயாணம் இதரப் படிச் செலவிஞல் ரூ 2000 வரையில் கடஞயிருப்பதஞல்—" ஸ்ரீ கணபதி சாஸ்திரி கடிதம். தஞ்சை சரஸ்வதி மஹால் ஆவணம். தொகுதி 8. பக். 21 160C. 8ல் 6.

*அடிகளார் உள்ளமும் அதிகாரி எண்ணமும்*

ஸ்ரீ அகிலாண்டேச்வரின் தாடங்கபிரதிஷ்டை ஸம்பந்தமாக நான் காண்டு காலம் நடந்த வழக்கினுல் ஏற்பட்ட செலவுகளும், யாத்திரைக்கு வேண்டிய அதிகப்படியான பரிவாரங்களினுல் ஏற்பட்ட செலவுகளும் சேர்ந்து, மடத்திற்குப் பெரிய பளுவாகியது. இதையுணர்ந்த ஆசார்ய ஸ்வாமிகள் மடத்தின் நிர்வாகப் பொறுப்புள்ள அதிகாரிகளைக் கூப் பிட்டு, 'அம்பிகையின் அனுக்ரஹத்தினுல் நமது மடத்தின் பாரம்பர்ய மான கைங்கர்யங்கள் ஸ்தாபிதமான மகிழ்ச்சி ஒரு புறமிருந்தாலும், இவ்வளவு பெரிய பணச் செலவையும், பாரத்தையும், மடத்திற்குப் பிற்காலத்தில் வரக்கூடிய நிர்வாஹிகளுக்கு வைத்துவிட்டோமே என் பதை யோஜித்துப் பார்க்கும்போது, ச்ருங்கேரி ஸ்வாமிகள் ஆசைப் பட்டதை அவரே செய்துவிட்டுப் போகட்டுமே என்று இருந்திருக்கலாமே,' என்று குறைப்பட்டு வருத்தத்துடன் தெரிவித்தார்கள். இதைச் செவி யுற்ற, நான்கு வருடங்களாகத் தாடங்கப் பிரதிஷ்டை வழக்கில் பிரதிவாதியாக இருந்து, இரவு பகலாகச் சலியாது உழைத்துவந்த மடத்தின் முக்ய அதிகாரி ஒருநாள் திடீரெனக் காணப்படவில்லை. எங்குச் சென்றுர் என்று ஒருவருக்கும் தெரியவில்லை.

ஒருவாரம் சென்றது. சோர்வடைந்த முகத்துடன் அவர் திரு வானைக்காவல் மடத்திற்குத் திரும்ப வந்துசேர்ந்தார். அவர் வந்த விவரமறிந்த ஆசார்யாள், அவரை அழைப்பித்து, சில தினங்களாக எங்கு சென்றிருந்தார் என நிர்ப்பந்தித்து கேட்டார்கள். "மடத்திற் கேற்பட்ட பொருள்தாரச் சுமையினுல் ஸ்ரீ மஹாஸந்நிதானத்திற்கு உண்டான நினைப்பை அகற்ற முடியுமா என்ற நப்பாசையைக் கொண்டவனுகத் தஞ்சாவூர் அரண்மனைக்குச் சென்றேன். அங்கு மஹாராஜாவை பேட்டிகண்டு, விரங்களைத் தெரிவித்து, திருவானைக் காலிலிருந்து கும்பகோணம் போகும் வழியில், தஞ்சாவூரில் மடம் முகாமிடலாமென உத்தேசம் இருக்கின்றது. மஹாராஜா அதற்கு ஸம்மதம் கொடுத்தால் ஏற்பாடு செய்கிறேன், என்று கூறினேன். மஹாராஜாவும், அரண்மனை அதிகாரிகளும், ஒருமித்து, தற்காலம் மடத்தைத் தஞ்சாவூருக்கு வரவேற்று உபசரிக்கும் அளவிற்கு அரண் மனையில் நிதி வஸதியில்லை என்றும், பின்னெரு ஸமயம் பார்த்துக் கொள்ளலாம் என்று சொன்னுர்கள். ஆகையால் மனக்கலக்கத்துடன் திரும்பிவிட்டேன்" என்று துக்கத்துடன் விக்ஞாபனம் செய்தார்.

*மன்னன் கொண்ட மாற்றம்*

சில தினங்கள் கழித்து, ஸ்ரீ ஆசார்யாள் திருவானைக்காவலைவிட்டுக் கும்பகோணம் நோக்கி யாத்திரையை மேற்கொண்டார்கள். திருவை யாறு வழியாக யாத்திரை திட்டமிடப்பட்டது. வண்டிகள், மாடுகள், குதிரைகள், யானை, ஒட்டகை, திருவையாறு சாலையில் திரும்பிக் கொண்டிருந்த போது, திருப்பச்சாலையில் நின்றுகொண்டிருந்த அரண் மனை சிப்பாய்கள் எதிர்பாராத வண்ணம் வண்டிகளையும், யானை

குதிரைகள் முதலிய யாவற்றையும் கட்டாயப்படுத்தி, தஞ்சாவூர் சொல்லி மிரட்டி அவர்களையும் தஞ்சை நோக்கித் திருப்பிவிட்டார் காரணம் ஏதும், சொல்லாது இது 'ராஜாவின் உத்திரவு', என்று சொல்லி மஇரட்டி அவர்களையும் தஞ்சை நோக்கி திருப்பிவிட்டார் கள், அரண்மனை வீரர்கள்.

மாபெரும் வரவேற்பு

ஆசார்யாளின் பல்லக்கும் அங்கு வந்து அடைந்தது. அரண்மனை அதிகாரிகள் பூர்ணகும்பம் முதலிய மரியாதைகளுடன் வரவேற்று அழைத்துச் சென்றனர். சில தினங்களுக்கு முன் ஆசார்யாள் தஞ் சையில் முகாமிடுவதற்கான வஸதியில்லை எனக் கூறின அரசரின் நிலையில் திடீர் மாற்றம் எப்படி ஏற்பட்டது? மஹாராஜாவிற்குக் கனவில் ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரர் தோன்றி உடனே ஆசார்ய ஸ்வாமி களை அழைத்துவந்து, எல்லாவித மரியாதைகளுடன், ஸ்வாமி பூஜைக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென உத்திரவாகியதே காரணமெனத் தெரிய வந்தது. கனவை நினைவாக்கினர் மஹாராஜா. வெகு விரைவில் எல்லாவிதமான ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. வெண்ணாத்தங்கரை சத்திரத்திலும் பலவிதமான பக்ஷணங்கள், ஒவ்வொரு சத்திரத்திலும் ஒருவகைப் பக்ஷணமாகச் செய்யப்பட்டு, நிரப்பப்பட்டன. பகவத்பாத பீட மத்யஸ்தர் ராமசந்த்ர தீக்ஷிதர்தான் எல்லா ஏற்பாடுகளையும் கவனித்து நிர்வகித்து வந்தார்.

மாபெரும் வரவேற்பு:

சில நாட்கள் தங்கியபோது, தினமும் ஸ்வாமி பூஜை ஸந்தர்ப் பணை முதலியனவற்றிற்குச் சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஸ்ரீ சந்த்ரமௌளீச்வர பூஜை, அபிஷேகம் அர்ச்சனை முதலானவற் றிற்கு உபயோகமாகக்கூடிய பாத்திரங்கள் பல தங்கத்தினால் செய் யப்பட்டும், சில நவரத்னங்கள் பதிக்கப்பட்டும், மடத்திற்கு அர்ப் பணம் செய்யப்பட்டன. தங்கப் பூண் கட்டிய வலம்புரிச் சங்கு முதலியனவற்றையும் மஹாராஜா கொடுத்தார். பெரிய அம்பாரியில் நகர பிரதக்ஷிணம் நடத்தி வைக்கப்பட்டது. மஹாராஜாவிற்கு ஒரே பெண். மாப்பிள்ளை ஸகாராம் சாஹேப் என்பார். இரண்டு யானை களைப் பிணைத்து, அவை மீது பெரிய வெள்ளி அம்பாரியை வைத்துக்கட்டி, அம்பாரியில் ஆஸனமும் அமைத்து, ஆஸனத்தில் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளை அமரும்படி விக்ஞாபித்துக் கொண்டதின் படி, அவர்களும் அதில் வீற்றிருக்க, அவர்களுக்குப் பின்புறமாக மாப்பிள்ளை ஸகாராம் சாஹேபு உட்கார்ந்திருக்க, ஊர்வலம் ஆரம்ப மாகியது. இந்த அம்பாரிக்குப்பின், இதேபோல் இரண்டு யானைகளைப் பிணைத்து அவற்றின்மீது கட்டப்பட்ட மற்றொரு அம்பாரியின் மீது மஹாராஜாவும், அவருக்குப் பின் திருவானைக்காவல் தாடங்கப் பிரதிஷ்டை வியாஜ்யத்தில் முக்கியப் பங்கு கொண்டு, வெற்றியடைந்த மடத்தின் அதிகாரியான சாஸ்திரிகளும் வீற்றிருக்க, வாத்ய கோஷங் களும், பிருதுகளும், புடைசூழ, ஸ்ரீ ஆசார்யாளும், பின்னர் மஹா ராஜாவும், தஞ்சை முக்ய வீதிகளின் வழியே பவனி வந்தது நகர

மக்களை ஆனந்த வெள்ளத்தில் மூழ்கடித்தது. ஸ்வாமிகள் அமர்ந்திருந்த வெள்ளி அம்பாரியை மடத்திற்கே ஸமர்ப்பித்தார் அரசர்.

### கனகாபிஷேகம் — 1848

தஞ்சாவூர் முகாமை முடித்துக்கொண்டு, அந்த நகரை விட்டு ஸ்ரீ ஆசார்யாள் புறப்படும் நாளன்று அவர்களது தலைமறையும் அளவிற்கு, இலேசான தங்கத்தலான பூக்களால், ஸ்வாமிகளுக்குக் கனகாபிஷேகம் செய்துவைத்தார் மஹாராஜா. இக் கனகாபிஷேகத்தினால் கிடைத்த தங்கத்தின் ஒரு பகுதியைக் கொண்டு மேலே குறிக்கப்பட்ட மடத்து அதிகாரி மடத்திற்குச் சாச்வதமாக நெல் வருவாய் கிட்டும்படி, கும்பகோணத்திற்கருகேயுள்ள கருப்பூர் கிராமத்தில், பிற்காலத்தில், பெருமளவில் நஞ்சை நிலம் வாங்கினார். இப்படிக் கனகாபிஷேகத்தின் வருவாயைக் கொண்டு வாங்கப்பட்ட நிலங்களிலிருந்து கிடைக்கும் நெல் ஸ்ரீ சந்த்ரமௌளீச் வரஸ்வாமிக்கு நைவேத்யம், பிராம்மண ஸமாராதனை, தர்மப்ரசாரம் முதலிய பணிகளுக்கஉ சாச்வதமாக உதவும்படி வாங்கி வைத்தவர் மேற்சொல்லப்பட்ட அந்த சாஸ்திரியே!

**ஆவணக்குறிப்புகள்:**

தஞ்சை சரஸ்வதி மஹால் ஆவணங்கள் ஸ்ரீமத் ஆசார்யாள் தஞ்சைக்கு வரும்போதும் திரும்பச் செல்லும் போதும் மாபெரும் பட்டணப்பிரவேஸ ஊர்வலங்கள் நடைபெற்றமையைக் காட்டுகின்றன.

"ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாபிஷிக்த ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமி அவர்கள் கும்பகோணத்திற்கு விசயம் செய்வதற்காகக் கோட்டையில் உள்ள பஜனசாலை ஸ்ரீ விடோபா ஸ்வாமி கோயிலில் இருந்து மகாராஜராஜ ஸ்ரீ திவான்சாகேப் ஸ்வாமியாரை கூட்டிக்கொண்டு நான்கு வீதி பட்டணப்பிரவேஸம் செய்தி சிரேயஸில் விட்டுவிட்டு அரண்மனைக்கு விசயம் செய்ததற்கு சுங்கத்தார் தீவட்டிகளை விட்டதற்குக் கூலி ரூ 9-1-1 துட்டு 15"

என்றும்[1] இவ்வாணத்தால் 1. ஸ்ரீமத் ஆசார்யாளுக்குத் கும்பகோணம் திரும்பும்போதும் பெரும் ஊர்வலம் நடத்திப் பட்டணப் பிரவேஸம் செய்து வழியனுப்பினர் 2. அரசன் குடந்தை வரை வந்து வழியனுப்பித்திரும்பினான். 3. பலநூறு தீவட்டிகள் ஏந்தப் பட்டன (ஊர்வலச் சிறப்புக்காட்டும்) என்னும் செய்திகள் புலனாகும்.

ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு நடைபெற்ற வரவேற்பு ஊர்வலம் மற்றும் கனகாபிஷேகம் பற்றி (1249 சகர்சூன்/1748க்குரிய ஆவணக்குறிப்புக்கள் வருமாறு:[2]

"ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள் ஜம்புகேச்வரத்திலிருந்து திருவாதி வழியாகத் தஞ்சாவூர் கோட்டை வருவதற்கு சிலவுக்காக சக்கரம் 600க்கு கம்பெனி ரூ [illegible] பைசா 8 கொடுக்கப்பட்டது."

1. தஞ்சை சரஸ்வதி மஹால் மோடி ஆவணம். தொகுதி. 8.

"ஷ சுவாமிகள் அரண்மனே சந்திரமவுலீச்வரர் கோயிலில் அவர் கொண்டு வந்த சந்திரமவுலீச்வரர் பூஜை செய்ததற்காக கனகாபிஷேகம் செய்ததில் ரூ 2 குறைவு ஏற்பட்டதை கஜானுவில் சுவாமி காரியஸ்தர் கணபதிசாஸ்த்ரியிடம் ரூ 2"

"திவான் சகேபு அவர்கள் மேற்படி சுவாமிகள் கும்பகோணத்துக்குப் போகும்போது விடோபாசுவாமி பஜனே சாலேயில் இருந்து நாலு வீதியும் பட்டணப்பிரவேசம் செய்து கொண்டு விடப்பட்டது"

"கிருஷ்ணவிலாஸ் மாடியில் பத்து அங்கணத்துக்கு மேலான உயர்ந்த ரேட்டுத் துணிகள் போடுவதற்கு கொடுக்கப்பட்டது 10 சக்கரம்."

இக்குறிப்புகள் 1. வரவேற்பு ஊர்வலம் பெரும் பொருட்செலவில் நிகழ்ந்தது. 2. கனகாபிஷேகம் தஞ்சை அரண்மனேயின் ஒரு பகுதியில் உள்ள ஸ்ரீசந்திரமவுலீச்வரர் திருக்கோயிலில் ஸ்ரீமத் ஆசார்யாள் ஸ்ரீ சந்திரமவுலீச்வரர் பூஜை செய்தற்காக அங்கேயே நடைபெற்றது. 3. ஆசார்யாள் குடந்தை திரும்பும்போதும் பட்டணப் பிரவேஸம் நிகழ்ந்தது. அரசன் கொண்டுவிட்டு வந்தான். 4. அரண்மனே விதானங்கள் கட்டி அழகுப்படுத்தப்பட்டது என்று உணர்த்துகின்றது.

# VIII சுதர்சன மஹாதேவர்க்கு

கனகாபிஷேகங்கள்.

ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகட்குப் பின் சுதர்சன மஹாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகள் பீடாதிபத்யமுற்றனர். இவர்கள் பூர்வாச்சிரமத் திருநாமம் ஸ்ரீ மகாலிங்கம். ஹரிதச கோத்திரத்தினர். ஆச்வலாயன , சூத்திரத்தினர். தந்தையார் ஸ்ரீ சேஷாத்ரி சாஸ்த்ரிகள். இவர்கள் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஆன பின்னர் இந்தியமெங்கணும் இருந்த சமஸ்தானதிபதிகளால் போற்றிப் பரவப்பட்டமையைப் பலப்பல காகித ஆவணங்கள் காட்டும். இந்தியமெங்கணும் விஜய யாத்திரைகளை மேற்கொண்டனர் ஸ்ரீமத் ஆசார்யாள் அவர்கள்.

**இரண்டு கனகாபிஷேகங்கள்**

ஜகத்குரு ஸ்ரீ சுதர்சன மஹாதேவர்க்கு இரண்டு முறை கனகாபிஷேகங்கள் நிகழ்ந்துள்ளன. முதல் கனகாபிஷேகம் இரண்டாம் சிவாஜி அரசனாலும் இரண்டாம் கனகாபிஷேகம் புதுக்கோட்டை சமஸ்தானதிபதியினாலும் நடைபெற்றன. இக் கனகாபிஷேகங்கள் இருவேறு சூழலில் நடைபெற்றன. முதலாவது கும்பகோணம் ஸ்ரீ சங்கர மடத்திலும் பின்னது புதுக்கோட்டை அரண்மனையிலும் நிகழ்ந்தது.

# முதல் கனகாபிஷேகம் — 1850

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஸாதாரண வருஷம் கார்த்திகை மீ சுக்லபக்ஷத்விதியை தினம் விதேஹ முக்தி அடைந்தனர். ஸ்ரீ சுதர்சன மஹாதேவர் பீடாதிபத்யமுற்றனர். இவர்கள் ஸ்ரீ காமகோடி பீடம் ஏறிய ஆண்டு 1850 ஆகும் என்பதனை ஆவணங்கள் வாயிலாக அறியலாம்.

ஸ்ரீ சுதர்சன மஹாதேவர் பட்டம் ஏற்றமையை ஒட்டிக் கும்பகோணத்தில் கார்த்திகை மீ 14 தேதி புதன் கிழமை ஒரு பட்டணப் பிரவேஸ ஊர்வலம் நடைபெற்றமையை 1850 நவம்பர் 24 குரிய ஒரு ஆவணக் குறிப்புக் காட்டுகிறது. [1]

(1) 1850 நவம்பர் 24. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில் அபிஷேகம் செய்யப்பட்ட ஸ்ரீ சங்கராசார்ய சுவாமி அவர்களுடைய மடத்தார் கொடுத்தஜாபிதா.

ஸ்ரீ சுவாமியார் மிகவும் காயலாவாயிருந்து அவருடைய சமாதி காலத்திலேயே அவருடைய அதிஷ்டானத்துக்கு ஸ்ரீ மஹாதேவேந்திர சரஸ்வதி சுவாமி அவர்களுக்குப் பட்டம் கொடுக்கப்பட்டதற்காகக் கார்த்திகை மீ 14 உ புதன் கிழமை கும்பகோணத்தில் அவர்க்கு ஊர்வலம் வகையரு நடத்த வழக்கப்படி தாசில்தார் வகையரு உத்தியோகஸ்தர் காத்திருந்து ஜாக்கிரதை செய்வதற்கும் கும்பகோணம் தாலூகா தாசில்தாருக்கு உத்தரவாக வேணுமென்று எழுதிய மனுவை ரெசிடென்ட் சாயேப் கலெக்டருக்கு அனுப்பி அதில் கண்டபடி ஸ்ரீ சுவாமியாருடைய ஊர்வலத்திற்கு வழக்கப்படி ஜாக்கிரதை செய்ய கும்பகோணம் தாசில் தாருக்கு உத்தரவிட வேணும் என்று தஞ்சாவூர் ரெசிடென்ட் வேலை பார்க்கும் I.H. BISHOP ES அவர்களுக்கு சர்கேல் அண்ணஜி தியாகராஜ பண்டிதர் கேட்டுக் கொள்கிறார்கள்.

தஞ்சை மஹால் மோடி தொகுதி. VIII B 155 C 13ல் 4 பக்.3.

'1850' கும்பகோணம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாபிஷிக்த ஸ்ரீ சங்டகராசார்ய ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமீ சமாதி ஆனதினலே அதிஷ்டானத்துக்கு அவருடைய சிஷ்யரான ஸ்ரீ மஹாதேவேந்திர ஸரஸ்வதி சுவாமி அவர்களை பட்டம் சூட்டி னதினல் பேஸ ஸ்ரீ வழக்கப்படி நாளொன்றுக்கு ஒவ்வொருவருக்கும் 10 ரூ வீதம் கொடுத்தார்கள்' என்னும் ஆவணமும்[1] இன்னும் சில ஆவண்களும்[2] ஸ்ரீ சுதர்சன மஹாதேவர் கி.பி. 1850-ல் கார்த்திகையில் ஸ்ரீ காமகோடி பீடமேறியமை காட்டும்.

**1850இல் மஹாமகம்**

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளாக ஸ்ரீ சுதர்சன மஹாதேவர் 1850 கார்த்திகையில் ஸ்ரீ பீடமேறினர். அதே ஆண்டு மாசிமகம் 12 ஆண்டுகட்கொருமுறை அமையும் மஹாமகமாக அமைந்தது. அதற்கு முன் மஹாமகம் 1838-ல் அமைந்தது.

**அரசனின் வருகையும் ஆசார்ய தரிசனமும்**

தஞ்சை மராட்டிய மன்னனை இரண்டாம் சிவாஜி மஹாமஹப புனித நீராட்டுக்காகத் தன் சவாரியினருடன் கும்பகோணத்துக்கு விஜயம் புரிந்தான்; மஹாமஹத் திருக்குளத்தில் நீராடினன். பலப்பல தானங்கள் புரிந்தான்; அண்மையில் உள்ள கோயில்கட்குச் சென்று தரிசனம் செய்தான்; ஸ்ரீ மடத்துக்குச் சென்று ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளைத் தரிசித்தான். இவ்வகைகளில் பத்தாயிரத்தி அறுநூற்று தொண்ணூற்றிரண்டு ரூபாய் செலவு செய்தனன்' என்று ஒரு ஆவணம் கூறும்.

'மஹாராஜா அவர்கள் பல கோவில்களுக்குப் போனதும ஸ்ரீ சங்கராசார்யார் மடத்துக்குப் போனதும் பல தான தருமங்கள் சிப்பந்தி செலவும் 10692 $^3/_4$ 3 வீசம் 8 பைசா

என்பது அரண்மனை செலவுக் குறிப்பு.

---

1. தமிழ்ப் பல்கலைக்கழக மோடி ஆவணம். 4ல் 363.

2. a. 'கும்பகோணம் ஸ்ரீ காஞ்சி காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமி அவர்கள் சமாதி ஆகும்பொழுது அந்தப் பீடத்துக்கு அவர்களுடையு சிஷ்யரான ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ மஹா தேவேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களுக்குப் பட்டம் கட்டினதற்காகப் பாதகாணிக்கை — ரூ.160—15—1' — சரஸ்வதிமஹால் மோடித்தொகுதி I 114 C பக்.3ல் 5ல் 2.

b. B.No. 351 அரபி ஆண்டு 1251. கிறித்துவ ஆண்டு. 1850 ஷீட் — 1 — 120.

'கும்பகோணம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாபிக்ஷிக்த ஸ்ரீ சங்கராசார்ய சுவாமி சித்தி அடைந்தது. அவருடைய சிஷ்யர் அந்த அதிஷ்டானத்துக்கு சங்கராசார்ய மகாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகள் பீடத்தில் அமர்ந்த விஷயம்'

மோடி பவுண்ட் வால்யூம் 2. பக்கம் 7 காண்க.

3. ச.ம. மோ.த. தொகுதி. 2. பக்கம். 37

*சிவாஜி புரிந்த கனகாபிஷேகம் — 1850*

இரண்டாம் சிவாஜி ஸ்ரீமத் ஆச்சார்யாளைத் தரிசித்த காலத்தில் இவர்க்குக் கனகாபிஷேகம் புரிந்தான். இவ்வரசன் இவர்தம் குரு நாதர்க்கும் மும்முறை கனகாபிஷேகம் செய்தவனுதலின் பெரும் பக்தியுடன் இவர்க்கும் கனகாபிஷேகம் செய்தனன். இக் கனகாபிஷேகம் 1850 ஆம் ஆண்டு மஹாமஹத்தின்போது நடைபெற்றது. இக் கனகாபிஷேகத்துக்கு 776 1/2 மூணு வீசம் சக்கரம் செலவழிக்கப்பட்டது.

**மஹாமஹத்துக்காக மகாராஜா கும்பகோணம் சவாரியில் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளுக்குக் கனகாபிஷேகம் செய்தது 776 1/2 மூணு வீசம்'**

என்பது சரஸ்வதி மஹால் ஆவணக் குறிப்பு.

## இரண்டாம் கனகாபிஷேகம்

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் சுதர்சன மஹாதேவருக்குப் புதுக்கோட்டை மன்னன் கனகாபிஷேகம் செய்தனன். இது இப் பெரியவாளுக்கு நடைபெற்ற இரண்டாவது கனகாபிஷேகமாகும்.

புதுக்கோட்டையும் ஸ்ரீ காமகோடி பீடமும்

வடக்கே நேபாளம் முதலாகத் தெற்கே எட்டயபுரம், சிவகங்கை திருவனந்தபுரம் ஈருக இந்திய மெங்கனும் இருந்த சமஸ்தானதிபதி களின் குருபீட்மாக இருந்தது காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடமாகும். இதே நெறியில் புதுக்கோட்டை யரசரும் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடத்தைக் குருபீடமாகக் கருதி வணங்கி வாழ்ந்துள்ளனர்.

புதுக்கோட்டை சமஸ்தானதிபரின் குருநாதர் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள்; இவர்களுக்கு அளிக்கப் பெற்றன.[1] புதுக்கோட்டை சமஸ்தானத்து வாழ்ந்த மக்க ளில் மிகப் பெரும்பான்மையினர் வழிவழியாக - நெடுங்காலமாக (ஸ்ரீ காமகோடி பீடத்தடியவராக) இலங்கினர்.[2] என்பன ஆய்வறிஞர் கருத்துக்கள் ஆகும். சகம் 1613-ல் விசையரகுநாதத் தொண்டைமான் அளித்துள்ள செப்புப்பட்டயம் [3]திருச்சி மாவட்டம் அன்பிலில் ஸ்ரீ மடத்துக்குள்ள உரிமைகள் உரைக்கக் கூடியது ஆகும்.

புதுக்கோட்டை அரச மரபில் ராமச்சந்திர தொண்டைமான் கி.பி. 1839—1886-ல் அரசனுக இருந்தனன்; இவன் ராஜா ரகுநாதத் தொண்டைமானின் மகன் 1829 அக்டோபரில் பிறந்தனன்; 1839 சூலை 13-ல் அரசு கட்டில் ஏறினன். 1886 ஏப்ரல் 15-இல் காலமாயினன். இவ்வரசன் காலத்தவர் ஸ்ரீ சுதர்சன மஹாதேவர்.

---

1. PUDUKKOTTAI MANUAL. PART II page. 747
2. THE GURU OF THE KANCHI KAMAKOTI PEETA HAS A LARGE FOLLOWING WITH IN THE STATE AND SINCE HE IS THE GURU OF THE RULLING FAMILY HONOURSARE OCCORDED TO HIM DURING HIS VISITS TO THE STATE. IBID. PART.I PAGE 84
3. CP INS OF THE KOMAKOTI PHITHA – T.A. Gopinath Roa. No. 7. பக்கம் 89-98.

ஸ்ரீ சுதர்சன மஹாதேவரின் புதுக்கோட்டை விஜயம்

சுதர்சன மஹாதேவர் புதுக்கோட்டை அரசன் ராமச்சந்திரத் தொண்டைமான் வேண்டுகோட்கிணங்கிப் புதுக்கோட்டை விஜயம் மேற்கொண்டனர். இவ்விஜயம் பற்றி மல்லாதி தெக்ஷிணாமூர்த்தி சாஸ்த்ரி அவர்கள் அளிக்கும் விவரங்கள் பின்வருமாறு :-

பின்னர் ராமேச்வரம் புறப்பட ஸன்னத்தமாக ஸகல ஏற்பாடு களையும் செய்தார்கள். அப்பொழுது தான் புதுக்கோட்டை தொண்டைமான் மன்னர் ஸ்ரீ ராமச்சந்திர மகாராஜா அவர்கள் ஸ்வாமிகளைப் புதுக்கோட்டைக்கு விஜயம் செய்ய வேண்டுமென்று கோரித் தன் உத்யோகஸ்தர்களை நேரில் அனுப்பியிருந்தார்கள் தொண்டைமான் மன்னர்களிடமும் புதுக்கோட்டை ஸமஸ்தான் மக்களிடம் தனியாக ஓர் அன்பு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளுக்குண்டு. ஏன்? 1691 A.D. ஆண்டில் விஜயரகுநாத தொண்டைமான் மன்னர், அக்காலத்திய பீடாதிபதியும் பகவன்னாமாவை ஸித்தாந்தம் செய்த வருமான 59வது ஜகத்குரு ஸ்ரீ பகவந்நாம போதேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளுக்கு தாமரப்பட்டயம் ச்ாஸனம் செய்து கொடுத்திருக் கிறார்கள். அப்பால் ஸ்ரீ ஸதா சிவப்ரம்மேந்திராளுடைய உப தேசங்களின்படி பலவித தர்மங்களை உலகத்தில் வேறு எங்கும் இல்லாதபடி நடத்தியிருக்கிறார்கள். 60, 61, 62வது பீடாதிபதிகளும் ஸ்மஸ்தானத்திற்கு விஜயம் செய்து அனுக்ரஹம் செய்திருக்கிறார்கள். 1846ம் வருஷத்தில் நடந்த தாடங்கப்ரதிஷ்டையின்போது தொண்டை மான் மன்னர் வெகுவாகப் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார். இந்த எல்லா விஷயங்களையுமறிந்த மகாராஜாவின் கோரிக்கைபடி ஸ்வாமிகள் புதுக்கோட்டைக்குப் புறப்பட்டார்கள். ஸ்ரீ சுவாமிகளு டைய விஜயம் மக்களுக்குத் தெரிந்ததும் ஆங்காங்குள்ள ஜனங்கள் ரஸ்தாக்களைச் செப்பனிட்டும் மகர தோரணங்களால் அலங்கரித்தும் கூட்டம் கூட்டமாக ஒவ்வொரு இடத்திலும் ஆண் பெண் குழந்தை களுடன் கூடி லோக குருவை வரவேற்றுப் பணிந்து பலவித காணிக் கைகளையும் அர்ப்பித்து ஸ்வாமிகள் பல்லக்கின் கூடவே பின்துடர்ந்து வந்தார்கள். அரசன் எவ்வழியோ அவ்வழியே பிரஜைகளும் பின் பற்றுவார்கள் என்ற ஆன்றோர் மொழிக்கோர் சான்றாகும். மகாராஜா அவர்கள் நகர எல்லையில், யானைகள் குதிரைகள் பட்டாளங்கள் துருப்புகளுடனும், தலைமை உத்யோகஸ்தர்கள் திவான் முதலியவர் களுடனும் புடைசூழ அநேக வாத்யங்கள் முழங்க, தானாதிகாரியின் தலைமையில் நூற்றுக் கணக்காக வைதீர்கள் வேதங்களை கோஷிக்க, மகாராஜா எதிர்கொண்டு வரவேற்று, பூரணகும்பங்களைக் கொடுத்து பட்டத்து யானையின்மேல் நன்கு ஜோடித்த தங்க அம்பாரியில் ஸ்ரீ லோககுருவை வீற்றிருக்கச் செய்து, வெண்குடை பிடித்தும் சவுரி சாமரங்களை வீசியும் ஆலவட்டங்களும் நன்கு அலங்கரிக்கப் பட்ட ராஜ வீதிகள் வழியாக ஊர்வலமாக அழைத்துவர ஆங்காங்கு கணக்கற்ற மக்கள் கர்ப்பூர ஹாரத்திகளையும் காட்டி தங்களுடைய எல்லை இல்லாத பக்தி பரவசத்தை வெளிப்படுத்தி, நகரமத்தியுள்ள அரண்மனையில் பூஜா கிருஹத்திற்கு முன்னுள்ள கல்யாண வுஇாஸ்தில் எழுந்தருளச் செய்தார்கள்.

ஸ்ரீ சுவாமிகள் விஜயத்தை ஸமஸ்தானத்தில் உள்ள ஆலயங்களிலும் விசேஷ பூஜைகள் நடந்தன. ஜாதிமதம் வித்யாஸமில்லாமல் எங்கும் ஏழைகளுக்கு திருப்தியாய் அன்னம் போடப்பட்டது. ஸமஸ்தானத்தில் அன்று முதல் சில மாதங்கள் வரை பெரும் திருவிழாவாகத் தானிருந்தது. மகாராஜா அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ ஸ்வாமிகளும் சாதுர்மாஸ்ய வ்ரதத்தை புதுக்கோட்டையிலேயே நடத்தினார்கள். ஸமஸ்தானத்தில் பிரஸித்தி பெற்றதும் வெகு புராதனமான க்ஷேத்ரங்களாகிய, திருக்கோகர்ணம், திருஅரண்குளம், திருமணஞ்சேரி, குடுமியாமலை, விராலிமலை, நார்த்தமலை, திருக்களம்பூர், திருமயம் ஆலயங்களில் சிவ விஷ்ணு மூர்த்திகளை தர்சனம் செய்தார்கள். அநேக ஸங்கீத வித்வான்கள் ஸ்ரீ ஸ்வாமிகள் முன் காலக்ஷேபங்களைச் செய்தார்கள். மகா வித்வான்களான: பாடகம் கோபாலய்யர் ஸ்வரகத் கிருஷ்ணய்யர், பிடில் கிருஷ்ணன், டோலக் நன்னிமியா சோடிம்யா முதலானவர்களுடைய திறமையை ஸ்வாமிகள் புகழந்து அவரவர்களுக்கு ஸன்ஸமானங்களையும் செய்தார்கள். வித்வத் ஸபைகள் நடந்து பலவிதமான சாஸ்திரங்களில் பிரக்யாதி பெற்றவர்கள் தர்ம ஸூக்ஷ்மங்களை விசாரித்து நிர்ணயங்களைச் செய்தார்கள். தமிழ், தெலுங்கு, கன்னடம், மகாராஷ்ட்ரம் முதலிய பல பாஷைகளில் புலமை பெற்ற பலர் தாங்கள் இயற்றிய நூல்களையும் ஸாகித்யங்களையும் ஸ்வாமிகள் முன்பாக அரங்கேற்றி ஆசி பெற்றார்கள். இந்த ஸந்தர்ப்பத்தில்தான் தமிழில் பெரிய புராண கீர்த்தனங்களை இயற்றிய மழவை சின்னசாமி பாரதி 'லோக குருவே சங்கரநாம தருவே' என்ற கீர்த்தனத்தைப்பாடி ஸ்வாமிகளிடம் வெகுமதி பெற்றார். சேந்தமங்கலம் பாரதியார் கபில நாடகத்தை இயற்றி அரங்கேற்றினார். இன்னும் பல பாடகர்கள் இவர்களைப் பற்றிய பாடல்களையும் கீர்த்தனங்களையும், பெரியோர்கள் பாடி வருவதை கேட்கலாம். ஸமஸ்கிருதத்தில் 'குருவரமாச்ரயத்' என்ற மோஹனகீர்த்தனமும் 'குருசரணாரவிந்தமே' என்ற காம்போதி தெலுங்கு கீர்த்தனமும் பிரஸித்தம். சிலர் சதாசிவ ப்ரம்மேந்திர கிருதிகளை பாடும்பொழுது பாடல்களுக்கு அந்த கிருதிகளின் பெருமையை எடுத்துக் கூறியும், சப்த ஞானத்துடனும் அர்த்த ஞானத்துடனும், எந்தந்த ராகங்களில் கிருதிகள் அமைக்கப்பட்டனவோ அவைகளை மாற்றாமலும், நிம்மதியாகவும், பக்தியோடும், சுத்தமாக பாடவேண்டுமென்று ஸ்வாமிகள் உபதேசித்ததாக என் தகப்பனார் சொல்லிக் கேட்டிருக்கிறேன். ஸமஸ்தானத்தில் மிக பிரஸித்தி பெற்றும் மகா மேதாவியும் மஹா சீலரும், ஆத்திச்சூடி கொன்றை வேந்தன் முதலியவைகளை வடமொழியில் மொழி பெயர்த்தவரும் அடியேனுக்கு வித்யா குருவுமான ஸ்ரீ ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் கூறின ஒரு சுலோகம் ஞாபகத்திற்கு வருகிறது.

"बिभ्राजद्भवदीयमङ्गलतनोस्सन्दर्शनेनाधुना
सर्वे नव्यरसालराज्यनिलयाः संप्राप्ताभाग्योदयाः ।।

'மகா மேதாவியும், தெய்வத்தன்மை நிறைந்தவும், மங்களகரமான திருமேனியுமுள்ள தங்களைப் பார்த்த மாத்திரமே, இந்நாட்டு மக்கள் அனைவரும் பாக்யத்தையும் ஜன்ம லாபத்தையும் பெற்றவர்களாகிறோம்' என்று வர்ணித்தார். காலஞ்சென்ற திவான் ரீஜண்ட் A. சேஷய்ய சாஸ்திரிகளால்ல நன்கு மதிக்கப்பட்டு Poet Laurette என்ற பிருது பெற்ற தமிழ் புலவர் ஸ்ரீமான் உலகநாத பிள்ளை லோக குருவைப் பின்வருமாறு பல பாடல்களை இயற்றில வணங்கியிருக்கிறார்கள்.

'பக்குவர்க்கே யுபதேசம் பண்ணுவர்
குருக்கள் எல்லாம் தங்கள்
பக்குவத்திற் கேற்றவா றுபதேசம்
பண்ணுதலா லிவரைப் பல்லோர்
தக்கவரும் லோககுரு வென்றனர்
முன்னின்ற பொருள்படிகம் தன்னுள்
ஒக்கவா றிலகுதலாற் படிகமனப்
பரனிவனே உவமையில் லான்'

'வறியாற்கொன் றீவதே யீகை மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரதுடைத் தொன்றணிந் தானும்
பூசனையு ஞானமில்லா புல்லறிவோர்க் கும்மருளிப்
பூசனைகொண் டானுலகிற் போந்து'

'ஞானகுரு ஷண்மதஸ்தா பனகுரு ஞாலகுரு
வானகுரு புருஷார்த்தங் கள்நான்கும் வழங்குகுரு
மானகுரு மஹத்தானகுரு தந்த்ரகுரு மந்த்ரகுரு
கானகுரு அத்து விதகுரு சங்கரகுருவே'

இன்னும் இப்பெரியாரைப் போற்றி வடமொழி தென் மொழி களிலும் தெலுங்கு கன்னட பாஷைகளிலும் வல்லுனர்களான பலர் அநக கீர்த்தனங்களையும் இயற்றிப் பாடியிருக்கிறார்கள். இப்படி பலவிதங்களிலும் பல லக்ஷக்கணக்கான மக்களும் மன்னரும் போற்றிய பிறகு சாதுர்மாஸ்ய விரதத்தையும் முடித்துக்கொண்டு விசுவரூப யாத்திரையாக புறப்படுமுன் ஸ்ரீ ராமச்சந்திர தொண்டமான் மன்னர் கனகாபிஷேகத்தைச் செய்தார். புதுக்கோட்டையை விட்டு நமன ஸமுத்திரம் விஜயம் செய்து அங்குள்ள ச்ரோத்ரிய மகாஜனங்களால் பூஜிக்கப்பட்டு திருமெய்யம் வந்ததும் நகரத்தார்கள் ஒன்றுகூடி கணக்கற்ற காணிக்கைகளையும் பூஜைகளையும் செய்து அங்கிருந்த மார்க்கங்களில் மக்கள் ஆரவாரம் செய்து கூடவே பின் தொடர கோயிலூர் வந்தார்கள். வியாகரண சாஸ்திர மேதாவியான சங்கர சாஸ்திரிகளை முன்னிட்டுக்கொண்டு கோயிலூர் அத்துவித மடத்தின் அதிபர்கள் பாதபூஜைகளைச் செய்து வணங்கவும் அப்பால் மதுரை மாநகரம் சென்று மீனாக்ஷி ஸுந்தரேச்வரனை தரிசித்து சிஷ்யர்களால் பூஜிக்கப்பட்டு ராமநாதபுரம் விஜயம் செய்தார்கள். ஸ்ரீ முத்து ராமலிங்க ஸேதுபதி மகாராஜா அவர்கள் அபார பக்தியுடன் சகல மரியாதைகளுடன் வணங்கி வரவேற்று பிக்ஷைகளை நடத்தி கூடவே ஸ்ரீ ஸ்வாமிகளுடன் பின் துடர்ந்து ராமேஸ்வர

யாத்திரையை சிறப்பிக்கச் செய்தார். ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளுக்கும் ஸேதுபதி குலத்தவருக்கும் 400 வருஷங்களாகவே ஸம்மந்தமுண்டு. 54வது பீடாதிபதியான ஸர்வக்ஞ ஸதாசிவ போதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பர்வீர ஸேதுபதிக்கு ஸகல வேதாந்த ரஹஸ்யங்களையும் திரட்டி ஸ்வாத்ம நிரூபணம் என்ற நூலை இயற்றி உபதேசித்திருக்கிறார்கள். இந்த ஸ்வாமிகளுக்கு ஸர்வ மானியமாக புலவசேரி என்ற கிராமம் விடப்பட்டு இன்னும் ஸ்ரீ மடத்தின் அனுபவத்திலிருக்கிறது.

# IX பரமாசார்யாளுக்குக் கனகாபிஷேகங்கள்.

## 1. சிறப்புக்கள் சில

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் திருமரபினர்க்கு நிகழ்வுற்ற கனகாபிஷேகங்கள் பலப்பல. பரமாசார்யாளான ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகட்கு நடந்த கனகாபிஷேகங்கள் முன்னைய கனகாபிஷேகங்களில் இருந்து சற்று மாறுபட்டவை; மகத்துவம் சான்றவை.

பூஜ்ய ஸ்ரீ பரமாசார்யாள் அருளாணை பிறப்பித்தால் பலகோடி ரூபாய்களைப் பாத காணிக்கையாகச் சமர்ப்பிக்க — பல லட்சம் ரூபாய்களில் அறக்கட்டளைகளை நிறுவக் காத்துக்கிடக்கும் செல்வந்தர்கள் ஏராளம். பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் இல்லாதவரும் — ஏழையரும்கூட அறப்பணிகள் புரிந்து திருவருளும் குருவருளும் பெறும் வகையில் நல்ல பல திட்டங்களை நவிலக் கூடியவர்கள் — நடத்துவிக்க நினைப்பவர்கள். பிடியரிசித் திட்டம் முதலான பல திட்டங்களை அருளி,

ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே
செல்லும் வாயெல்லாம் செயல்

என்னும் குறள்வழி நின்று ஒவ்வொருவரும் தர்ம கைங்கரியங்களில் ஈடுபட அருள்வழி காட்டிய மகான். இப்பெரியவாளுக்கு நடைபெற்ற கனகாபிஷேகங்கள் முன்னைய போல ஏகதேசமாக நடைபெற்றனவல்ல; பலரும் இணைந்து தாமாக அளித்த நன்கொடைகளால் நடைபெற்றவை. பக்தர் பலரும் 'கனகாபிஷேகப் புண்ணியப்பேறும் பாக்கியமும்' பெற வழிகோலியவை என்பது முதலில் அறியத்தக்க தொன்று.

மன்னவராலும் அவர்தம் சிஷ்யராலும் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகட்குக் கனகாபிஷேகங்கள் நடந்த காலங்களில் ஸ்ரீ மத் ஆசார்யாள் தமக்குப் பின்னவராக மற்றொரு ஆசார்யாளை நியமிக்கவில்லை. எனவே நான் மறையும் ஆறங்கமும் வல்லவராய ஸ்ரீ மடத்து அடியவரே கனகாபிஷேகம் புரிந்தனர் எனலாம். பூஜ்ய ஸ்ரீ பரமாசார்யாளுக்கு நடைபெற்ற கனகாபிஷேகங்கள் இவ்வகையிலும் மகத்வம் சான்றவை. இவை மறையவரால் செய்யப்பட்டனவல்ல. ஸ்ரீ பரமாசார்யாளுக்கு நடைபெற்ற கனகாபிஷேகங்கள் அனைத்தும் தெய்வத்துக்குத் தெய்வம் ஆற்றிய கனகாபிஷேகங்கள். இவை ஜகத்குரு ஸ்ரீ மத் ஆசார்யாளுக்கு அவர்தம் பிரதம சிஷ்யரான ஜகத்குரு ஸ்ரீ மத் புதுப்பெரியவாள் ஆற்றியன என்பது அறிந்து பூரிக்கவேண்டிய செய்தி.

இவை நாம் வாழுங்காலத்து நடந்த அற்புதங்கள். நம்மில் பாக்கியம் புரிந்த சிலரால் பங்கேற்று நடத்தப்பட்டவை. புண்ணியர் சிலரால் தரிசித்து மகிழும் பேறுபெற்றவை. இந்த நூற்றாண்டுச் சமய சரித்திர ஏடுகளில் நிலையான இடம் பெற்றவை. இக்கனகாபி ஷேகங்கள் பற்றி விரிவாகக் காண்போம்.

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர் சரித்திரம் 64-ஆவது பீடாதி பதிகளாக இலங்கிய ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களுக்கு மூன்று முறை கனகாபிஷேகங்கள் நடந்தமை கூறும். அதுபோலவே பரமாசார்யாளான ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜ காசார்ய வர்ய காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கும் மும்முறை கனகாபிஷேகங்கள் நடைபெற்றுள்ளன.

1. முதலாவது கனகாபிஷேகம் 1954-ஆம் ஆண்டு சின்ன காஞ்சிபுரம் ஆனைக்கட்டித் தெருவில் உள்ள பாடசாலைக்கருகில் நடைபெற்றது.

2. இரண்டாவது கனகாபிஷேகம் 12-3-1957-இல் அதே பகுதியில் நடைபெற்றது.

3. மூன்றாவது கனகாபிஷேகம் 11.4.65 அன்று சென்னை மயி லாப்பூரிலுள்ள சமஸ்கிருதக் கல்லூரி அருகில் நிகழ்ந்தது.

இவை ஸ்ரீ பரமாசார்யாளுக்கு நடைபெற்ற கனகாபிஷேகங்களுள் பக்தர்கள் விருப்பின்படி பலரும் அறிய நடந்த பான்மையின என்பது அறியத்தக்கதொன்று. வெளியுலகுக்குப் பரவலாகத் தெரியக் கூடாது என்னும் ஆக்ஞைப்படி மிக எளிமையாக ஸ்ரீமத் பரமாசார் யாளுக்குப் பல கனகாபிஷேகங்கள் நிகழ்ந்துள்ளன என்பதும் இங்கு அறிதற்பாலதொன்றாகும்.

## 2. காஞ்சியில் முதல் கனகாபிஷேகம் 1954

1954- விஜய வருஷம். சமய வரலாற்றில் சாதனைகள் பல படைக்கப்பட காரணமாக இருந்த ஆண்டு. இருபதாம் நூற்றாண்டில் ஆன்மீகம் தழைப்பிக்க நடமாடும் தெய்வமான ஸ்ரீ பரமாசார்யாள் புதுப்பெரியவாள் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகட்கு ஆச்ரம உபதேசம் அளித்தருளிய ஆண்டு. இவ்வருட்செயல் 1954 மார்ச் 22 ஆம் நாள் நடைபெற்றது. இதே ஆண்டில்தான் ஸ்ரீ புதுப்பெரியவாள் ஸ்ரீ பரமாசார்யாளுக்குக் கனகாபிஷேகம் புரிந்த அருட்செயலும் நிகழ்ந்தது.

1954 ஆம் ஆண்டில் ஸ்ரீ பரமாசார்யாளுக்குக் கனகாபிஷேகம் நடத்த வேண்டும் என அன்பர் பலரும் விரும்பினர். ஸ்ரீமத் ஆசார்யாளிடம் பலமுறை விண்ணப்பித்தனர். பூஜ்ய ஸ்ரீ பெரியவா ளிடம் விண்ணப்பித்துக்கொண்டு கனகாபிஷேகப் பணிபுரிந்தனர்.

பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் கனகாபிஷேகம் மிக எளிமையாக நடைபெற வேண்டும் என்று திருவுளம் கொண்டிருந்தனர். ஸ்ரீ மத் ஆசார்யாள் அருளுளப் பாங்கின் வண்ணம் புகைப்படங்கள் எடுத்தல் பத்திரிக்கை அறிவிப்புக்கள் தவிர்க்கப்பட்டன. கனகாபிடேகத் தன்று கனகாபிஷேத்துக்குரிய பொற்காசுகள் ஸ்ரீ காமாக்ஷி திருக்கோயிலில் எழுந்தருளிய ஆதிசங்கர பகவத் பாதாசார்யாளுக்கு முதற்கண் அபிஷேகிக்கப்பட்டன. பின்னர் அவை சின்ன காஞ்சிபுரம் கொண்டுவரப்பட்டன. ஆனைக்கட்டித் தெரு ஸ்ரீ மடம் திண்ணை அருகில் சிறு மேடையில் பூஜ்ய ஸ்ரீ புதுப்பெரியவாள் ஸ்ரீ பரமாசார்யாளுக்குக் கனகாபிஷேகம் புரிந்தனர்.

இக்கனகாபிஷேகம் ஜகத்குரு திவ்ய சரித்ரம் பக்கம். 432 இல் குறிக்கப்பட்டுள்ளது.

### 3. காஞ்சியில் கனகாபிஷேகம்

**6-9-1957**

ஐம்பத்து நாலில் நடந்த கனகாபிஷேகத்தை காணும் பேறு பெற்றவர் மிகச் சிலர். பெருத பலர் ஸ்ரீமத் ஆசார்யாளிடம் மீண்டும் மீண்டும் விண்ணப்பித்துக் கொண்டனர். வயதான பல அடியவர்கள் 'எங்களுக்குக் கண்பார்வை இருக்கும்போதே கனகாபி ஷேக தரிசனம் தரவேண்டும்' என்று பூஜ்ய ஸ்ரீ பெரியவாளிடம் அடிக்கடி விக்ஞாபனம் செய்துகொண்டதும் உண்டு.

அடியவர்களின் அன்பு மழை காரணமாகப் பூஜ்ய ஸ்ரீ ஆசார்யாள் தம்மீது கனக மழை பொழிய ஒப்புதல் நல்கினார்கள். இக்கனகாபி ஷேகம் ஸ்ரீ பரமாசார்யாள் காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடமேறி ஐம்பதாவது அருளாட்சியாண்டினையொட்டி நிகழ்ந்த பீடாரோஹணப் பொன்விழா வைபவத்தில் நிகழ்ந்தது.

ஜகத்குரு ஸ்ரீ பரமாசார்யாளுக்கு நிகழ்ந்த இக்கனகாபிஷேகம் சின்ன காஞ்சிபுரத்தில் உள்ள ஆனைக்கட்டித் தெரு ஸ்ரீ மடத்தின் முன்புறம் பலரும் கண்டு தரிக்கும் வண்ணம் அமைந்த உயர்ந்ததொரு மேடையில் நிகழ்ந்தது. இக்கனகாபிஷேகம் பற்றி ஜகத்குரு திவ்ய சரித்திரம் கூறுவதாவது:—

குருநாதருக்கு நடைபெற்ற கனகாபிஷேகம்

சென்ற 12.3.87-இல் நடைபெற்ற ஸ்ரீ பரமாசார்யாளின் பீடாரோஹண பொன்விழாவை யொட்டி அவர்களுக்கு கனகாபிஷே கம் செய்ய வேண்டுமென்று பக்தர்கள் விரும்பினார்கள். ஆனால் அவர்களோ தமக்கு ஏன் கனகாபிஷேகம் செய்ய நினைக்கிறீர்கள். "அதை ஆதி சங்கரருக்குச் செய்து மகிழுங்கள்" எனக் கட்டளையிட் டார்கள். குருநாதரின் கட்டளையை நிறைவேற்றும் வகையில் காமாக்ஷி அம்பாள் ஆலயத்திலுள்ள ஆதிசங்கரரது சிலா விக்ரஹத்திற்கு

4.5.1957 சங்கர ஜயந்தியன்று புனித கங்கை நீரால் கடஸ்தாபனம் செய்து, மஹன்யாஸ ருத்ரம் ஜபித்து தங்கத்திஞல் செய்யப்பட்ட புஷ்பங்களேக் கடத்தில் கலந்து அபிஷேகம் செய்யப்பட்டது. ஆயினும் சிஷ்யர்களின் அவா அத்துடன் நின்றுவிடவில்லே. மறுபடியும் ஆசார்யர்களே அணுகி விக்ஞாபனம் செய்து கொண்டார்கள். பக்தர்களின் தீவிரமான பக்தியை மனத்தில் கொண்டு அவர்களது விருப்பப்படி கனகாபிஷேகம் செய்து கொள்ள ஒருவாறு இணங்கி ஞர்கள.

6.9.1957-இல் இந்த அபிஷேகத்திற்கு நாள் குறிப்பிடப்பட்டது. தினசரி செய்தித்தாள்களின் வாயிலாக இந்த விழா சின்னக்காஞ்சீபு ரத்தில் அந்தத் தேதியில் நடைபெறுவதை முன் கூட்டியே அறிவிக்கப்பட்டிருந்தது. பார்க்கக் கிடைக்காத இந்தப் புனித விழாவைக் காண முதல் நாளே மக்கள் காஞ்சியில் ஆயிரக்கணக்கில் கூடிவிட்டனர். கங்கை, கோதாவரி, கிருஷ்ணு, நர்மதை, காவேரி முதலான புண்ய நதிகளின் நீரைப் பன்னிரண்டு குடங்களில் பொற்காசுகளுடன் நிரப்பி ஏகாதச ருத்ர பாராயணம், ஹோமங்கள் செய்து அன்று பகல் ஒரு மணிக்கு ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் திருக்கரங்களால் குருநாதருக்கு அபிஷேகம் செய்விக்கப்பட்டது. காணக்கிடைக்காத இந்தக் காக்ஷியை முதல் தடவையாகக் கண்டவர்கள் பரவசமடைந்தனர். தாங்களே பாக்யசா லிகள் எனக்கூறிக்கொண்டு ஆனந்தக் கண்ணீரில் மூழ்கினர். இதற்கு முன் 1954-இல் காஞ்சிமாநகரிலேயே மற்ருெரு கனகாபிஷேகம் நடைபெற்றது பக்தர்களுக்கு நினைவிருக்கலாம்.

கனகாபிஷேக ஆசியுரை

கனகாபிஷேகம் நிகழ்ந்தபின் ஸ்ரீ பரமாசார்யாள் அங்குக் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான அன்பர்கட்கு அருளாசி வழங்கி உரையாற்றினர். அவ்வருள் உரை பின்வருமாறு:

இந்தக் காஞ்சீபுரத்தில் பகவான் மாமரத்தடியில் எல்லாப் பாவத்தையும் போக்கி அநுக்கிரகம் பண்ணுவதற்காக ஏகாம்ரேசுவ ரராகக் காத்துக்கொண்டிருக்கிருர். வரதனும் மற்றத் தெய்வங்களும் இருக்கிருர்கள். நூற்றெட்டுச் சிவாலயங்களும், பதினெட்டுத் திருப் பதிகளும் இருக்கின்றன. எல்லாத் தேவர்களும் சேர்ந்து ராஜராஜே சுவரியைப் பிரதட்சிணம் பண்ணும் படியாக நடுவில் நான்கு கோபுர வாயில்களேக்கொண்ட ஆலயத்தில் ஸ்ரீ காமாட்சி, பக்தர்க ளுக்கு அநுக்கிரகம் பண்ணிக்கொண்டிருக்கிருள்.

அந்த காமாட்சியின் மகிமையிஞல் மூகன் அநுக்கிரகம் பெற்ருன். மூகன் என்ருல் ஊமை என்று அர்த்தம். ஊமையாக இருந்த அவனுக் குக் காமாட்சி தேவியின் அநுக்கிரகத்திஞல் கவிபாடும் திறமை உண்டாயிற்று. அங்கே ஒரு மகான் தபஸ் பண்ணிக்கொண்டிருந்தார். தவத்துக்ச்சாகப் பிரசன்னமாக வேண்டிய முறைப்படி அம்பாள்

ஆவிர்ப்பவித்தாலும், பக்குவகாலம் என்னும் மற்றொரு முறை சிறிது எட்டியிருந்தது. காமாட்சி தேவி பிரசன்னமாகி அவருக்கு முன்னே வந்து, ''வாயைத் திற'' என்று சொன்னாள். ''நீ யாரோ!'' என்று அம்பிகையை அப்பால் போகச் சொல்லிவிட்டார். மூகன் அங்கே பேசாமல் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டிருந்தான். ''நான் வாயைத் திறக்கிறேன்'' என்று சொல்லி அவன் திறந்தான். அம்பாள் அவன் வாயில் தாம்பூலத்தை உமிழ்ந்தவுடன் அவன் பாட ஆரம் பித்து விட்டான். ஆர்யா சதகம், பாதாரவிந்த சதகம், ஸ்துதி சதகம், கடாக்ஷ சதகம், மந்தஸ்மித சதகம் என்று ஐந்நூறு ச்லோகங்கள் கங்கை வெள்ளப் பிரவாகமாக அவனுடைய வாக்கிலிருந்து வந்தன. அந்த ஐந்நூறு ச்லோகங்களிலும் மந்திர சாஸ்திரம், தந்திர சாஸ்திரம், அநுக்கிரக விசேஷம் எல்லாம் கலந்திருக்கின்றன. அம்பிகையின் வாக்கிலிருந்து அவனுடைய வாக்குக்கும், அவனுடைய வாக்கிலிருந்து திரும்பி நமக்கும் அநுக்கிரகம் செய்ய வந்திருக்கிறது அது.

அதிலே ஒரு ச்லோகத்திலிருந்து அம்பாள் துண்டீரமண்டலத்தில் அற்புதமான அருள் புரிந்திருப்பதாகத் தெரியவருகிறது. துண்டீரம் என்றால் ஆதொண்டைக் கொடி, தொண்டை மண்டலத்துக்குத் துண்டீர தேசம் என்று பெயர். அந்த ச்லோகம்—

खण्डीकृत्य प्रकृतिकुटिलं कल्मषं प्रातिभश्री-<br>शुण्डीरत्वं निजपदजुषां शून्यतन्द्रं दिशन्ती ।<br>तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री<br>चण्डी देवी कलयति रतिं चन्द्रचूडालचूडे ।।

சந்திரகண்டத்தைச் சிரசில் தரித்துக்கொண்டிருக்கிற பரமேசுவர னுக்குப் பரம லாபமாக இருக்கிறவள் அம்பிகை. துண்டீரம் என்னும் தொண்டை மண்டலத்துள் காஞ்சீபுரத்தில் அவள் இருக்கிறாள். வடக்கே காளஹஸ்திக்குப் பக்கத்தில் ஸ்வர்ணமுகி என்ற நதி இருக் கிறது. பொன்முகரி என்பார்கள். தெற்கே பெண்ணையாறு; பிநாகினி என்று பெயர். பரமசிவன் தன் வில்லாகிய பிநாகத்தால் உண்டு பண்ணிய நதி. கிழக்கே சமுத்திரம். மேற்கே விரிஞ்சிபுரத்துக்குப் பக்கத்தில் ஒரு மகாமடு. இந்த எல்லைக்குள் இருக்கும் பிரதேசம் எல்லாற்றுக்கும் தொண்டை மண்டலம் என்று பெயர். துண்டீரம் என்றும் பெயர். இந்த இடத்தில் ஒரு சமயம் பஞ்சம் வந்த காலத்தில் ஸ்வர்ண விருஷ்டி - தங்க மழை பெய்யும்படியாகச் செய்தாள் அம்பிகை. 'तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री' என்று இந்த ச்லோகத்தில் ஊமையினுடைய வாக்கிலே கங்கை வெள்ளமாக வந்திருக்கிறது.

பஞ்சம் எதனால் வருகிறது? ஸ்வபாவமாக ஜனங்கள் அநேக தப்புகள் பண்ணுகிறார்கள். அதனால் பாவங்கள் உண்டாகின்றன. யாராவது ஒருவன் பாவம் பண்ணினாலும் அவன் அடைகிற துன்பத்தைக் காட்டிலும் அந்தத் தேசம் அதிகத் துன்பத்தை அடை கிறது. பஞ்சம் உண்டாகிறது.

புத்தி இல்லாததனுலே தப்புப் பண்ணுகிறேம். உயர்ந்த புத்தி நமக்குக் கிடைத்தால் பாவம் பண்ணமாட்டோம். வெறும் பக்தி மாத்திரம் போதாது உண்மையான அறிவு இருக்கவேண்டும். உண்மையான அறிவுக்கு மேதை என்று பெயர். மேதா தட்சிணு மூர்த்தி என்று கேட்டிருப்பீர்க்ளே!

காஞ்சீபுரத்தில் இருந்துகொண்டிருக்கிற அம்மாள் தன்னுடைய பக்தர்களுக்கு இயல்பாக உள்ள தோஷங்களை எல்லாம் போக்கி நல்ல மேதையை அநுக்கிரகம் பண்ணிக்கொண்டிருக்கிருள். அநேக மாக, எந்த ஊரிலும் ஸ்ரீசக்ரத்துடன் தனிக் கோயிலில் அம்பிகை இருக்க மாட்டாள். ஆனுல் காஞ்சீபுரத்தில் மாத்திரம் இப்படி உட்கார்ந்து ஸ்ரீ ராஜராஜேசுவரியாக உலகம் முழுவதும் அநுக்கிரகம் பண்ணிக்கொண்டு ஆறு காலமும் தரிசனம் கொடுத்துக்கொண்டு நான்கு கோபுர வாயில்கள் இருக்கும்படியான ஆலயத்தில் இருக் கிருள்.

அங்குள்ளவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து, பஞ்சத்தின் கஷ்டத்தைப் போக்க ஸ்வர்ண விருஷ்டி உண்டாகும்படியாகச் செய் தாள் என்று அவளது கடாக்ஷம் பெற்ற மூகன் வாக்கிலிருந்து ஒரு ச்லோகம் வந்திருக்கிறது. தொண்டை மண்டலத்தில் அம்பாள் ஸ்வர்ண விருஷ்டி செய்ததற்கு அறிகுறியாகப் பொன் விளைந்த களத்தூர் என்று ஓர் ஊரின் பெயரும் அமைந்திருக்கிறது.

அதே அம்பாள் பீடத்தில் ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகள் ஆஸேது ஹிமாசல பரியந்தம் யாத்திரை பண்ணி, ஷண்மத ஸ்தாபனம் செய்து, காமாட்சியின் உக்ர சக்தியை மாற்றிச் சாந்தியடையச் செய்து, சிலா ரூபத்தில் ஸ்ரீசக்ரத்தைப் பிரதிஷ்டை பண்ணினுர். பிறகு இங்கே ஸர்வக்ஞபீடாரோகணம் செய்தார். ஆசார்யர்கள் சந்நியாசம் வாங்கிக்கொள்வதற்கு முன்பு நடந்த ஒரு கதை. பிரம்ம சரிய ஆசிரமத்தில் ஒரு வீட்டுக்குப் பிக்ஷைக்குப் போனுர். அது மிகவும் ஏழைய்யான ஒரு பிராம்மணன் வீடு. கையிலே ஒன்றும் இல்லை. அந்தப் பிராம்மணன் உஞ்சவிருத்திக்குப் போயிருந்தான். அன்றைக்குத் துவாதசி. துவாதசி ஆயிற்றே என்று எங்கிருந்தோ ஒரு நெல்லிக்காயைப் பொறுக்கி எடுத்துவந்து வைத்திருந்தாள் அந்த வீட்டு அம்மாள். நல்ல நெல்லிக்காயும் அல்ல; அழுகிப் போன நெல்லிக்காய். அந்த வீட்டில் போய் ஆசார்யர்கள் பிக்ஷை கேட்டார். 'துவாதசி ஆயிற்றே, இந்தப் பிரம்மசாரி பிக்ஷை கேட்டு விட்டாரே. கொடுப்பதற்கு வேறு ஒன்றும் இல்லையே!' என மனம் வருந்தி அந்த நெல்லிக்காயைக் கொண்டுவந்து போட்டாள். கொண்டுவந்து போடும்போதே அவள் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வந்தது. அதைப் பார்த்தவுடன் அவளுடைய தாரித்திரியத்தால் உண்டான துன்பத்தை ஆசார்யர்கள் உணர்ந்து கொண்டார். மகாலக்ஷ்மியைப் பார்த்து, "இவர்களுடைய தாரித்தி ரியத்தைப் போக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். கனகதாராஸ் தவம் என்று அந்தப் பிரார்த்தனைக்குப் பெயர்.





ஸ்ரீ பரமாசார்யர்கள் தங்கத்திலை கட்டப்பட்ட ருத்திராக்ஷகிரீடம் மாலைகளுடனும்



ஸ்ரீ முடி சூடிய இராஜராஜன்

SECOND PLATE, SECOND SIDE

२७. पुदारुहे[24] नूटपधेनु

२८. वरहालकु [॥*] स्वस्तिाश्रि[25]मदाखिल भूमं-

२९. डलालंक्कार[26]त्रयस्त्रिशत्कोटि-

३०. देवतासेवित श्रि[25] कामाक्षिदेवि सना-

३१. ध[27]श्रि[25]मदेकांम्रनाथ[28]साक्षात्कार प-

३२. रमाधिष्टान कृतदि चतुर्युग-

३३. सकल धांर्मिक[29]राजपरिपालि-

३४. त सकल वेदशास्त्र मूल भूत-

३५. सत्यव्रतनामांक्कित[30]कांच्चि[31]दि-

३६. व्यक्षेत्रे शारदामठसंस्तित्त[32]श्रि-[25]

३७. मत्परमहंसप्ररिव्राजका-

३८. चार्यश्रि[25]शंक्कराचार्यमाजि-[33]

३९. त श्रि [25]चंद्र मवुळिश्वर स्वामिकि



ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் 62, 63, 64 ஆவது ஆசார்யாள் அதிஷ்டானங்கள் (கும்பகோணம்)



ஸ்ரீ மஹாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்




இரண்டாம் சரபோஜி.



இரண்டாம் சரபோஜி குடந்தையில் கட்டிய பூஜாக்ருஹ விமானம்.



ஸ்ரீ சந்திரசேகரேந்திரர் திருவவதார இல்லம்.

| | | | |
|---|---|---|---|
| 8. (1-23) | 3. | S.1243. A.D.1842. | मुद्रेचे कागद जमा - स्नूरमहाल पडिपत्ता - माहल जकासती — मा॰ सराफपेट - मा॰ आनुसाहेब बाग वगैरे - सरफेन्द्र राज पद - मा॰ जामदार खाना - दिल्या दुका प्रमाणे श्री मुखाचे पूर्वेस — |
| 204. | | " | महाराज राजश्री दिवाण साहेब शंकराचार्य स्वामीचे मठास स्वारी केल्या बा॰ कनकाभिषेकास पूजा होन्न फुलि ५००. |

207. Rajesri Dewan Saheb (Shivaji)'s visit to Sri Shunkaracharya Swami's mutt. — For Kanakabhishekam and pooja gold coins 500 —.

1842—கனகாபிஷேகம்—ஆவணம்.



ஜகத்குரு ஸ்ரீசுதர்சன மஹாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகள்.



புதுக்கோட்டை மன்னன் ராமச்சந்திரத் தொண்டைமான்.



ஸ்ரீபரமாசார்யாளுக்குக் கனகாபிஷேகம் நிகழ்ந்த ஆனைக்கட்டித் தெரு மடம்.





1957—ஸ்ரீ புதுப்பெரியவாள் கனகாபிஷேகம் புரியும்காட்சி. 1965-



1937—கனகாபிஷேகக் காட்சி

"பாவங்களைச் செய்தால் கர்மாக்களுக்கு ஏற்ற கஷ்டத்தை அநுப விக்கத்தான் வேண்டும். இவர்கள் பண்ணின கர்மாக்களுக்கு இத்தனை தாரித்திரியத்தை அநுபவித்தது போதாதா? இவர்களுடைய தாரித் திரியம் நீங்க வேண்டும்" என்று இவர் பிரார்த்தனை செய்த மாத்திரத்தில், ஒரு நெல்லிக்கனி கொடுத்த அந்த அம்மாள் வீட்டில் கோடிக்கணக்கான ஸ்வர்ணக் கனிகள் ஸ்வர்ண விருஷ்டியாகப் பொழிந்தன.

அம்பாளுடைய அநுக்கிரகத்தினால் துண்டீரத்தில் ஸ்வர்ண விருஷ்டி பொழிந்தது. ஆசார்யர்களுடைய அநுக்கிரகத்தினால் ஏழை யின் வீட்டில் ஸ்வர்ண விருஷ்டி பொழிந்தது. அம்பாளும் ஆசார் யர்களும் கிருபை புரியும் க்ஷேத்திரம் இது. 'உங்களுக்கும் கனகாபி ஷேகம் செய்துபார்க்க வேண்டுமென்று ஆசை" என்று ஒரு பிராம் மணர் என்னைக் கேட்டார். அவருக்கு வயசு எண்பதாகிவிட்டது. "நான் இருக்கிறபோதே பார்த்துவிட வேண்டும். அந்தப் புண்ணி யத்தை அநுக்கிரகிக்க வேண்டும்" என்றார். அபிமானத்தினாலே பக்தியினாலே கேட்டார். பிறகு, அவருக்குக் கண்பார்வை மங்கியது. "உமக்குக் கண்பார்வை இல்லையே. எதைப் பார்க்க முடியும்?" என்று சொல்லிவிட்டேன். அவருக்கு மறுபடியும் சிகித்ஸையினால் பார்வை கிடைத்தது. "இப்போது பார்வை வந்துவிட்டது; என் பிரார்த்தனையை நிறைவேற்ற வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். அவருடைய ஆசையைப் பார்த்து, "ஆகட்டும் என்று நானும் ஒப்புக்கொண்டேன். சொந்த ஹோதாவிலும் தகுதி இல்லை. தற்கால நிலையிலும் தகுதி இல்லை. அவரும் மற்றவர்களும் காட்டின அபி மானத்தால் தட்ட முடியவில்லை. அம்பிகையினுடைய அநுக்கிரகத் தினாலும் ஆசார்யர்களுடைய அநுகிரக விசேஷத்தாலும் உலகத்தில் கஷ்டம் எல்லாம் நீங்கி, தாரித்திரியம் நீங்கும்படியாகப் பிரார்த் திக்கிறேன்.

ஸ்வர்ண விருஷ்டி செய்வித்த அம்பிகையின் பிரதான க்ஷேத்திர மாகவும், நாபிபீடமாகவும், கனகதாரை ஸ்தோத்திரத்தினால் தங்க நெல்லிக் கனிகளை வருஷிக்கும்படி செய்வித்த ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்களுக்கு ஒரு முக்கிய ஸ்தானமாயும் உள்ள இந்தக் காஞ்சி ஷேத்திரத்தை ஸேவிப்பதே நமக்குப் பெரிய கனகாபிஷேகம்.

கலவையில் என்னுடைய குருவும் பரமகுருவும் சித்தி அடைந்தார் கள். அவர்களுடைய ஆராதனைக்காக நான் அங்கே போயிருந்தேன். எல்லாரும் என்னைக் கொண்டாடும்போது நானும் ஒருவரைக் கொண்டாட வேண்டாமா என்று ஐம்பது வருஷக் கொண்டாட் டத்தின்போது குரு, பரமகுரு இவர்களின் ஐம்பதாவது வருஷ ஆராதனைக் கொண்டாட்டத்துக்கு அங்கே போயிருந்தேன்

என்னுடைய குருவும் பரமகுருவும் சித்தி அடைந்த ஊர் கலவை. கலவை என்றால் வேறு பொருள்கூடச் சொல்லலாம். இரண்டறக்

கலக்கிற இடம் என்று சொல்லலாம். பரமாத்ம ஸ்வரூபத்தில் கலப்பது போலக் கலக்கும் இடம் அது. குருவும் பரமகுருவும் பரமாத்மாவோடு கலந்த இடம் கலவை.

அதற்கு முந்திய ஆசார்யர்கள் என்னுடைய பரமேஷ்டி குரு. அவர்கள் சித்தி அடைந்த இடம் இளையாற்றங்குடி. இது ராமநாத புரம் ஜில்லாவில் புதுக்கோட்டைக்குத் தெற்கே இருக்கிறது. அங்கே ஒரே சப்பாத்திக் காடாக இருந்தது. ஆசார்யர்கள் ராமநாதபுரம் எல்லாம் சுற்றிவிட்டு வரும் பிரயாணத்தில் அங்கே தங்கினர். வில்வ மரத்தடியில் தங்கினர். இரவு ஒரு மணி வரையில் பூஜை செய்து விட்டு நிஷ்டையில் இருந்தார். சித்தி அடைந்தார். அந்த இடத்தி லேயே கோயில் கட்டினர்கள்.

இளையாற்றங்குடி என்ற பெயர்கூடப் பொருத்தமாக இருக்கிறது. உலகம் முழுவதும் சுற்றிவிட்டு ஆசார்யர்களுக்கு உண்டான இளைப் பாறுங்குடி அது. செட்டி நாடு. 96 நாட்டுக்கோட்டை நகரத்தாருக்கு ஒன்பது சிவாலயங்கள் உண்டு. அவற்றில் இளையாற்றங்குடி பிரதான மாக உள்ளது. அங்கே இவருக்கு ஆலயம் நிர்மாணம் பண்ணினர்கள்.

குரு, பரமகுரு, பரமேஷ்டிகுரு ஆகிய மூவருக்கும் முந்தின ஆசார்யர்கள் பராபரகுரு. அவர் பல பல இடங்களுக்குச் சென்றார். திருச்சிராப்பள்ளிக்குப் பக்கத்தில் ஜம்புகேசுவரத்தில் அகிலாண்டேசுவரி அம்பாள் இருக்கிறாள். ஆதிசங்கரர் காஞ்சீபுரத்தில் சிலாரூபத்தில் ஸ்ரீசக்ரப் பிரதிஷ்டை செய்ததுபோல அங்கே ஸ்ரீசக்ரம், சிவசக்ரம் இரண்டையும் அகிலாண்டேசுவரி அம்பிகையின் தாடங்கமாகப் பிரதிஷ்டை பண்ணினர். அங்கே பராபரகுரு போய்விட்டுத் திரும் பிக் கும்பகோணத்துக்கு வருகிற வழியில் தஞ்சாவூர் மகாராஜா சிவாஜி வண்டிகளை எல்லாம் திருப்பி அவர்களை வரவேற்றுக் கனகாபிஷேகம் செய்தார். இந்தப் பராபரகுருதாம் ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீகாமாட்சிக்கும் ஸ்ரீசக்ரத்துக்கும் புனருத்தாரண கும்பாபிஷேகம் செய்தவர்கள்

கனகாபிஷேகம் செய்த சமயத்தில் சிவாஜி சமர்ப்பித்த சாதரா பெட்டியில் இருந்தது. அதை எடுத்துவரச் சொன்னேன். அதை நான் தரிப்பதே எனக்கு உண்மையான கனகாபிஷேகம் என்று நினைத்தேன். இதுதான் அந்தச் சாதரா. இதை எடுக்கும்போதெல்லாம் ஏராளமான தங்கத் தூள்கள் உதிர்கின்றன. பக்கத்தில் இருப்பவர் களுக்கெல்லாம் கனகாபிஷேகம் இந்தச் சாதராவே செய்கிறது. இதுவே நமக்கு, குருப் பிரஸாதமும் கனகாபிஷேகமும்.

ஸ்வர்ண விருஷ்டி செய்த ஸ்ரீகாமாட்சியின் கிருபையும், ஸ்வர்ண விருஷ்டி செய்வித்த ஸ்ரீ ஆசார்யர்களின் கிருபையும், ஸ்வர்ணாபி ஷேகம் பெற்ற ஸ்ரீ பராபரகுருவின் கிருபையும், இந்தத் தலைமுறை யிலுள்ள அன்பர்களுடைய அன்பு வர்ஷமுமே எனக்குக் கனகாபிஷே கம். என்னைக் காரணமாக வைத்து இந்தக் கனகாபிஷேகம் பிரபஞ்

சத்திலுள்ள எல்லா ஜீவராசிகளும் செழிக்கும்படி செய்யும் கனகவர்ஷம் என்னும் பொன்மாரியாக ஆகட்டும் என்று ஸ்ரீ அம்பிகையும் குருமூர்த்திகளையும் பிரார்த்திக்கிறேன்.

## 4. சென்னையில் கனகாபிஷேகம்

*11.4.65*

ஸ்ரீ பரமாசார்யாளுக்கு மூன்றுவது முறையாக நடைபெற்ற கனகாபிஷேகம் சென்னையில் நடைபெற்றது. இது 11.4.65 அன்று ஸ்ரீ ராமநவமியன்று நிகழ்ந்தது.

11.4.65 கனகாபிஷேகம் பற்றி ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் (மலர் 6. இதழ். 3. விசுவாவசு சித்திரை. 13.4.65) இதழ் கூறுவதாவது:—

### ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசார்யாளுக்கு கனகாபிஷேகம்

இவ்வருட வஸந்த நவராத்திரி மயிலாப்பூர் சம்ஸ்கிருத காலேஜில் மிகவும் விமரிசையாக நடந்தேறியது. தினம் காலையிலும், மாலையிலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஸ்ரீ ஆசார்யர்களைத் தரிசனம் செய்துகொண்டும், ஸ்ரீ சந்த்ர மௌளீச்வர ஸ்ரீ திருபுரசுந்தரி பூஜையும், ஸ்ரீ ராமர் பூஜையும், கண்டு பக்தி வெள்ளத்தில் மூழ்கி இருந்தார்கள் என்று சொன்னால் மிகையாகாது. ராத்திரி பூஜை 12 மணிவரையிலும் நடந்தது. வஸந்த நவராத்திரி முடிவில் (11—4—65) அன்று ஸ்ரீ ஆசார்யர்களுக்கு பக்த கோடிகளால் கனகாபிஷேகம் நடத்திவைக்கப்பட்டது. இதைப் பல்லாயிர ஆஸ்திகப் பெருமக்கள் தரிசித்து மனம் பூரித்தார்கள்.

ஸ்ரீ புதுப் பெரியவாள் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ ராமநவமி உத்ஸவத்தை முன்னிட்டு 9 நாட்களாக பூஜையிலிருந்த கலசங்களிலிருந்த புனித தீர்த்தத்தை ஸ்ரீ ராமபிரானுக்கு அபிஷேகம் செய்தார்கள். இந்த தீர்த்தம் ஸ்ரீ ஆசார்யர்களுக்குக் கோமுகம் வழியாக அபிஷேகமானதைக் கண்டு மாபெரும் ஜனத்திரள் மெய் மறந்திருந்தனர். பிறகு பொற்காசுகளை பெரிய கலசத்தில் போட்டு தீர்த்தத்துடன் பொற்காசுகளையும் ஸ்ரீ ஆசார்யர்களுக்கு அபிஷேகம் செய்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

ஸ்ரீ சாம்பமூர்த்தி சாஸ்த்ரிகள் எழுதிய ஜகத்குரு திவ்ய சரித்திரத்தில் இக்கனகாபிஷேகம்

மயிலாப்பூர் சம்ஸ்கிருத கலாசாலையில் ஸ்ரீ ராமநவமியன்று ஸ்ரீ ஆசார்யர்களுக்குச் சிஷ்யர்கள் கனகாபிஷேகம் செய்ய ஏற்பாடு செய்திருந்தார்கள். பதினன்கு காரட்டில் செய்யப்பட்ட ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் பதுமையுடன் கூடிய பொற்காசுகள் ஜபிக்கப்பட்ட கங்கை

நீர் கலசங்களில் சேர்க்கப்பட்டன. முதலில் அவைகளை ஸ்ரீ ராமரின் விக்ரஹத்துக்கு அபிஷேகம் செய்யும்படி ஸ்ரீ ஆசார்யர்கள் ஆக்ஞை செய்தார்கள். பின்னர் சிஷ்யர்களின் வேண்டுகோளுங்கிணங்க ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தமது திருக்கரங்களினுல் ஸ்ரீ குருநாதருக்கு அந்த தீர்த்தத்தையும் தங்க காசுகளையும் அபிஷேகம் செய்வித்தார்கள்., இந்த அபிஷேகக் காசுகளைச் சிஷ்யர்களும், பக்தர் களும் விலைக்கு எடுத்துக்கொண்டு அதன் மூலம் கிடைத்த ரூ. 15,000/-யும் ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலயத் திருப்பணிக்குச் சேர்த்து விட்டார்கள்.

என்று குறிக்கப்பட்டிருந்தது.

# X. நடமாடும் தெய்வத்துக்கு நவரத்னாபிஷேகம்

## 22.4.65

விலைமதிப்பு மிக்க நவரத்னங்களை இறைவனுக்குரியதாக்கினர்; அணிகலன்களில் பதித்து அணிவித்து மகிழ்ந்தனர் ஆன்றோர்.

நவரத்னங்களை இறையுருவின் பீடத்தில் பதித்தல் ஆகமங்களில் கண்டது. செப்புத் திருமேனிகளில் பீடத்தைப் பொருத்தும் பகுதியில் நவரத்னங்களை இடுவதுண்டு. இவ்வாறு செய்தலை 'ரத்னந்யாசம் செய்தல்' என்று கல்வெட்டுக்கள் கூறும்.[1]

### நவரத்னங்கள் புஷ்பங்கள்

புஷ்பங்களாக நவரத்னங்களைச் சமயச்சான்றோர் கருதினர். ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் அருளிய சிவார்ச்சனு சந்திரிகை நவரத்னங்களை இந்ரபுஷ்பம் எனக்கூறும்.

''வைரம், பத்மராகம், மரகதம், நல்முத்து, இந்திர நீலம், சூரிய காந்தம், சந்திரகாந்தம் ஆகிய இரத்தினபுஷ்பங்கள்''

என்பது சிவார்ச்சனு சந்திரிகை தமிழ்ப் பகுதி.[2]

'வஜ்ர பத்மராக மரகந்த மௌக்தி கேந்தரநீல மஹாநீல சூர்ய காந்தேந்து காந்தாநி புஷ்பாணி ஸகஸ்ர சுவர்ண புஷ்பாணி கரவீர நீலோத்பலஸமானி'
என்பது சிவார்ச்சனு சந்திரிகா.[3]

புஷ்போபசாரம் செய்யும் காலத்தில் ''இலிங்கத்தின் சிரசில் இரத்தினம் அல்லது சுவர்ண புஷ்பம் அல்லது மலர்களால் செய்யப் பட்ட இண்டைகளைச் சார்த்த வேண்டும்''

---

1. சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுக்கள் 3 முதல் 7 வரை காண்க.

2. சிவார்ச்சனு சந்திரிகை. - ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதர் — K.M. சுப்பிரமணிய சாஸ்திரி மொழிபெயர்ப்பு. தேவகோட்டை சிகாமக சித்தாந்த பரிபாலன சங்க வெளியீடு.9.(1927) புஷ்பவகை. பக்.121

3 சிவார்ச்சனு சந்திரிகா - ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதர். சமஸ்கிருத மூலம். காளீச்வர சிவாசார்யார் பதிப்பு. 1922. பத்யாதிப்கார. பக்.71

என்று இந்நூல்கூறும். [1]இவற்றால் இரத்தினங்களைப் புஷ்பமாகக் கருதியமை பெறப்பெறும்.

இரத்னோதகம் :-

இறைவனுக்கு நவரத்ன வகைகளோடு புனித நீரால் அபிஷேகஞ் செய்யும் முறையை ஆகம நூல்கள் விளக்குகின்றன.

ஸ்ரீ மத் அப்பைய தீக்ஷிதரின் சிவார்ச்சன சந்திரிகையின் அபிஷேக முறைகள் பற்றிக் கூறுங்கால்

'स्फटिक मुक्ताफल माणिक्क विद्रुम गोमेदक पुष्पराग गारुडेन्द्रनील सहितमुदक रत्नोदक'

என்று கூறப்பட்டுள்ளது.[2]

"இரத்னோதக மாவது படிகம், நல்முத்து, மாணிக்கம், பவளம், கோமதேகம், புஷ்பராகம், கருடப்பச்சை இந்திர நீலக்கல் எனும் இவற்றுடன் கூடிய நீர். இதனால் அபிஷேகம் செய்து உயிரெழுத்து மெய்எழுத்துக்கள் என்னும் மந்திரத்தால் சுந்தம் முதலியவற்றால் அருச்சிக்க வேண்டும் என்பது இதன் தமிழாக்கம். [3]

ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு நவரத்னாபிஷேகம்

கனகாபிஷேகம் செய்விக்கும் பாக்யம் பெற்ற ஸ்ரீமடத்து அடியவர்கள் இறைவனுக்குச் செய்யும் அபிஷேகமுறைகளை ஒட்டி 'நடமாடும் தெய்வத்துக்கு நவரத்னாபிஷேகம்' செய்வித்தமை வரலாற்றுச் செய்தி.

மயிலாப்பூர் கச்சேரி ரோடிலுள்ளவரும், பொதுநல சேவையில் ஈடுபட்டுவரும், முன்னாள் மாநகராட்சித் தலைவருமான வக்கீல் T.S. ராமஸ்வாமி அய்யரைச் சென்னை வாசிகள் நன்கு அறிவர். அந்த முதியவர் ஸ்ரீ ஆசார்யாளுக்கு நவரத்தினங்களைக் கொண்டு அபிஷேகம் செய்ய வேண்டுமென்று விரும்பினார். ஸ்ரீ ஆசார்யர்களோ அது தமக்கு விருப்பமில்லாதிருந்தும் அந்தப் பெரியவரது அவாவை நிறைவேற்ற மனமிரங்கி ஒப்புக் கொண்டார்கள். இந்த நவரத்னங்களை அவர் தமது குடும்பங்களைச் சார்ந்தவர்களிடமிருந்தும் நெருங்கிய சில நண்பர்களிடமிருந்தும் பெற்றார். மயிலை ஸ்ரீ சங்கரா லயத்தில் 22.4.1965-ஆம் தேதி அன்று பூஜை முடிந்ததும், வைரம், நீலம், பச்சை, சிகப்பு, முத்து, பவளம், கோமேதகம், வைடூர்யம், ஸ்படிகம் ஆகிய ரத்ன கற்கள் அடங்கிய கலச தீர்த்தத்தை ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தமது திருக்கரங்களினால்

1. IBID தமிழ் மொழிபெயர்ப்பு. பக்.126.
2. சமஸ்கிருத மூலம். பக்கம். 41. வரி. 17-8.
3. தமிழாக்கம். பக்கம். 74.

குருநாதருக்கு அபிஷேகம் செய்தார்கள். இது வரை நடைபெறாத இந்தச் சிறப்பான அபிஷேகத்தைக் காணக் காலையிலிருந்தே மக்கள் காத்திருந்து தரிசித்தனர்.

என்று இவ்வபிஷேக நிகழ்ச்சியை ஜகத்குரு திவ்யசரித்ரம் விவரிக்கும்.[1] கலசதீர்த்தத்துடன் நவரத்னங்களும், தங்கம் மற்றும் வெள்ளிக் காசுகளும் இடப்பட்டிருந்தன எனவும் நவரத்ன அபிஷேகக் காட்சி பக்தர்களுக்கு இதுவரை கிடைத்திராத அரிய பாக்கியம் எனவும் ஸ்ரீ காமகோடிப்ரதீபம் குறிப்பிடுகின்றது.[2]

---

1. ஜகத்குருதிவ்ய சரித்திரம். பக்கம்.
2. மலர். 6. இதழ். 4. விசுவாவசு. வைகாசி. 14.5.65

# XI. ஸ்ரீ புதுப்பெரியவாளுக்குக் கனகாபிஷேகம். 1987.

ஸ்ரீபுதுப் பெரியவாளுக்கு 1987-இல் கனகாபிஷேகம் நடைபெற உள்ளது. இக்கனகாபிஷேக நிகழ்ச்சிச் சமய வரலாற்றேடுகளில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட உள்ளதொரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும்.

**வரலாற்று முக்கியத்துவம்**

கனகாபிஷேகங்களுள் அதிமுக்கியத்துவம் உடையதாக இது அமைவதற்குக் காரணங்கள் பல உள்ளன.

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடத்து வரலாற்றின் மகோன்னதமான பொற்காலம் இது. ஸ்ரீ பரமாசார்யாள் ஸ்ரீமத் ஆசார்யாள் ஸ்ரீபாலபெரியவாள் என்னும் முப்பெரும் முனிபுங்கவர்கள் பெருங் கருணைக்கடல்களாய் நம்மவர்க்கருளும் நற்காலம் இது. இப்பொற் காலத்துக்கு மணிமுடி சூட்டுவதாக அமைவது இக்கனகாபிஷேகம் எனலாம்.

பூஜ்ய ஸ்ரீ பால பெரியவர்களாகிய<br>
**ஜகத்குரு ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள்**<br>
தம் பரமகுருவாகிய<br>
காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடம் 68-ஆவது ஆசார்யாளான<br>
**ஜகத்குரு பூஜ்ய ஸ்ரீ பரமாசார்யாள் அவர்கள்**<br>
அருளாசிபெற்றுத்<br>
**தம் குருநாதராகிய**<br>
**காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள்**<br>
**ஜகத்குரு பூஜ்யஸ்ரீ புதுப்பெரியவாளுக்கு**

ஆற்ற உள்ளது இக் கனகாபிஷேகம். என்பது இதன் முக்கியத்துவத்தைக் காட்டுவதாகும்.

**கனகத்தின் அளவு**

'காஞ்சிப் பெரியவர்க்கு ஆற்றப்பட உள்ள கனகாபிஷேகத்துக்கு 1008 பவுன் பொன்' என்று திட்டமிடப்பட்டுள்ளது. பல்வேறு பக்தர்கள் பொன் நன்கொடைகள் நல்கிய வண்ணமுள்ளனர். பொன் தளங்களாகவும் பொன் காசுகளாகவும் அபிஷே

கப்பட உள்ள இப்பெரும் பொன்னின் அளவினாலும் ஸ்ரீபுதுப் பெரியவாளுக்கு நடைபெற உள்ள கனகாபிஷேகத்தின் சிறப்பினை நாம் அறியவியலும்.

**கனகாபிஷேகச் சூழல்**

ஸ்ரீ காமகோடி பீடாதிபர்கட்கு நடைபெற்ற கனகாபிஷேகங் களைப் போலவே ஸ்ரீமத் புதுப்பெரியவாளுக்கு நடைபெற உள்ள இக்கனகாபிஷேகமும் மிகப்பல காரணங்களை முன்னிட்டு நடை பெறுவதாகும்.

**பொன்விழா ஆண்டில் . . .**

புதுப்பெரியவாள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யாள் தம் பொன் விழா ஆண்டில் ஆற்றிய பணிகள், அத்வைத வளர்ச்சிக்கும் அருந் தமிழ் வளர்ச்சிக்கும் பெரும் பங்காற்றியன. ஸ்ரீமத் ஆசார்யாள் திருமுறைவாணர்கள் ஸ்ரீவேலாயுத ஓதுவார் முதலிய அறுவர்க் குத் 'தமிழ்மறை இசைமணி' எனவும் திருமுறை உரை எழுதிய திருவாளர் ச. தண்டபாணிதேசிகர் முதலான அறுவர்க்குத் 'திருமுறை உரை மாமணி' எனவும் பட்டம் அளித்துப் பாராட்டியமை தமிழ் கூறு நல்லுலகம் அறிந்து போற்றிய அற் புதச் செயல். அது மட்டுமன்றி முதல் ராஜராஜசோழனின் 1000-ஆவது ஆண்டு நிறைவு விழாவினை ஒட்டி மேற்கொள்ளப் பட்ட முப்பெரும் பணிகள் வரலாற்றுய்வாளர்க்கு மன மகிழ்ச்சி யூட்டிய செயல்கள். இல்லார்க்கும் எளியார்க்கும் மருத்துவ மனைகள் அமைக்க வழிகோலி—ஏழை எளியவர்கட்குப் பலப்பல பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்கள் வகுத்தளித்து அவர்கள் வாழ வழிகாட்டிய அருளாளர் ஸ்ரீ புதுப்பெரியவாள்—இது சமு தாயப் பற்றுக்கொண்ட சான்றோர் கருத்து.

இவையே அன்றி

பொன் விழா ஆண்டினை முன்னிட்டு 50க்கும் மேற்பட்ட கோயில்களுக்குத் திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. பெரும் பான்மை நிறைவுற்றன.

பூஜைகள் நிகழ்வதே சிரமமாக உள்ள நூற்றுக்கணக்கான கோயில்களுக்கு நிதி உதவி வழங்கப்பட்டன.

இத்தகைய பணிகள் பலப்பல ஆத்திகம் தழைப்பிக்கும் அருட்கொண்டல் காஞ்சி ஸ்ரீகாமகோடிபீடாதிபர் ஸ்ரீபுதுப் பெரிய வாள் என்பதற்கு நிரூபணமாய் நிலைபெற்ற நிலையில் ஸ்ரீமத் ஆசார் யாள் வட இந்தியப் பயணம் மேற்கொண்டனர்.

**வட இந்தியப் பயணம்.**

இவ்வட இந்தியப் பயணத்தில் ஸ்ரீமத் ஆசார்யாள் ஆற்றிய சமயப்பணிகள் மிகப்பல. சமுதாயப் பணிகளோ ஏராளம். ஹிந்துக்களிடையே ஒற்றுமை உணர்வு வளர்க்கவும் இந்தியரிடையே சமத்துவம்–சகோதரத்துவம் பல்கவும் ஒருமைப்பாட்டுணர்வு உறுதிப்பெறவும் வழிகோலிய அருட்பயணம் இது. ஸ்ரீமத் ஆசார்யாள் சென்ற இடமெல்லாம் பெரும் வரவேற்புற்றனர் மிகப்பல சாதனைகள். ஆற்றிய வட இந்தியப் பயணம் எதிர்காலத்தில் நிகழ உள்ள எண்ணில்லாத சமயப்பணிகளுக்கு முன்னோட்டமாக அமைந்த அருட்பயணம் என்றால் அது மிகையாகாது.

**துவாதசலிங்க தரிசனம்.**

இமயத்தில் உள்ள கேதாரேச்வரர், சௌராஷ்டிரத்துச் சோமநாதர், உஜ்ஜைனி மஹாகாளேச்வரர், காசி விச்வநாதர், பரலி வைத்யநாதர், டாகினி பீமேச்வரர், அவுந்து நாகேச்வரர், நர்மதை தீரத்து ஓங்காரேச்வரர், நாசிக் அருகிலுள்ள த்ரியம்பகேச்வரர், எல்லோரா அருகில் உள்ள க்ருஷ்ணேச்வரர், ஸ்ரீசைலத்து மல்லிகார்ச்சுனர், இராமேச்வரத்து இராமநாதர் என்னும் பன்னிரண்டு ஸ்தலங்கள் துவாதசலிங்க க்ஷேத்திரங்களாகும்.

ஆதிசங்கர பகவத்பாதர் காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை உள்ள எல்லாத் திருத்தலங்களையும் தரிசித்தவர். நம் நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள 'துவாதசலிங்க க்ஷேத்திரங்கள்' அனைத்தையும் தரிசித்துத் 'துவாதசலிங்க ஸ்தோத்திரம்' அருளியவர். பூஜ்ய ஸ்ரீ புதுப்பெரியவாள் சென்ற வட இந்திய யாத்திரை வரை துவாதசலிங்க க்ஷேத்திரங்களுள் பத்தினைத் தரிசித்திருந்தனர். இவ்விஜய யாத்திரையில், மஹாராட்டிர மாநிலத்துள்ள க்ருஷ்ணேச்வரத்தையும் ஸ்ரீ சங்கரபகவத்பாதர் 'யோகவன்மை' மிகப் பெற்ற க்ஷேத்ரமான கேதாரத்துக் கேதாரநாதரையும் தரிசித்தனர்; துவாதலிங்க க்ஷேத்திர யாத்திரையை நிறைவு செய்தனர் என்பது பக்தர்கள் அறிந்தின்புற வேண்டியதொரு செய்தி.

**முனிவர்கள் போற்றிய முனிபுங்கவர்.**

காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் ஆதிசங்கரர் அமைத்த அருள் நிலையங்களின் தலைமை நிலையமாகவும்—நடுநாயகமாகவும் இலங்கியது—இலங்குவது. ஸ்ரீமத் ஆசார்யாள் சென்ற இடமெல்லாம் பொதுமக்களால் வரவேற்றுப் போற்றப் பட்டமை யோடன்றி

ஆங்காங்குள்ள துறவியராலும் குறிப்பாகச் சங்கராத்வைத நிலையங்களைச்சேர்ந்த குருநாதர்களாலும் வரவேற்றுப் போற்றப் பட்டமை வாசகர் அறிவதற்குரியது.

கர்நாடக மாநிலத்தில் துங்கபத்ரா தீரத்தில் உள்ளதும் 'கூடலி' என்னும் பெயருடன் இந்நாளில் வழங்குவதுமான இடத்தில் ச்ருங்கேரி ஸ்ரீமடம் உள்ளது. இச்சிருங்கேரி தொன்மையான மரபுப்பெருமை சான்றது. காஞ்சிப் பெரியவர் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திரசரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகளை இவ்வடநாட்டுப் பயணத்தில் கூடலிச்ருங்கேரி ஸ்ரீசாரதாபீடம் ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள் வரவேற்றனர்; ஸ்ரீமத் ஆசார்யாள் அங்குள்ள ஸ்ரீசாரதா அன்னையை வழிபட்டனர்; அவர்களொடு நெடுநேரம் உரையாடினர். ஸ்ரீமத் ஆசார்யாளைக் கூடலி ச்ருங்கேரி ஸ்ரீசங்கராசார்யாள் மூவரும் வரவேற்றமை ஸ்ரீகாமகோடி பீடத்தின் மாட்டு அன்னார் கொண்டுள்ள பெருமதிப்பினைக் காட்டுவதாகும்.

பகவத்பாதர் அமைந்தருளிய ஸ்ரீமடங்களுள் ஸ்ரீஜோதிர் மடமும் ஒன்று. ஸ்ரீஜோதிர் மடத்துச் சங்கராசார்யாளான ஸ்ரீசாந்த்ரானந்த சுவாமிகள் பூஜ்ய ஸ்ரீபெரியவாளுக்கு வரவேற்பளித்தமையும் இவ்வட நாட்டுப் பயணத்துள் குறிப்பிடத்தக்கதொரு நிகழ்ச்சியாக அமைந்தது.

**சர்வமத சம்மேளனங்கள்.**

''பொங்கு பல சமய மென்னும் நதிகள் எல்லாம்
புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும்
கங்குகரை காணாத கடல்''

இறைவன் என்னும் உண்மையைப் பாமரரும் உணர்ந்து செயல்படுவதன் மூலம் சமயக் காழ்ப்பும்—சண்டைகளும் நீங்கும்; சகோதரத்துவம் மிகும். இவ்வுண்மையைச் செயலாக்கும் வண்ணம் ஸ்ரீமத் ஆசார்யாள் தாம் சென்ற இடங்களில் எல்லாம் அவரவர் தாய்மொழியில் சமத்துவம்—சகோதரத்தும் வலியுறுத்தினர். ஒன்றுபட்டு வாழவேண்டியதன் முக்கியத்துவத்தை உபதேசித்தனர். சமயத் தலைவர்களும் சமய வாதிகளும் ஒன்றுபட்டால் ஆன்மீக ஒருமைப்பாடு அமையுமாதலின் ''சர்வமத சம்மேளனங்கள்' ஸ்ரீமத் ஆசார்யாளால் நடத்தப்பட்டன. பெங்களூரிலும் பம்பாயிலும் நடைபெற்ற இவை இந்தியரிடையே ஒற்றுமையுணர்வு மேலோங்க வழிகோலினவாதல் உறுதி.

மாபெரும் கும்பாபிஷேகங்கள்.

சென்ற வடநாட்டுப் பயணத்தின் போதே உருவான பலப்பல அருட்பணிகளை—ஆலயத் திருப்பணிகளை ஸ்ரீமத் ஆசார்யாள் இப் பயணத்தில் நிறைவு செய்தருளினர்.

'அலகாபாத்' பிரயாகையில் எழுபது லடசத்துக்கும் மேல் செலவு செய்து சமயச்சீர்மை சான்றதாய்—ஒருமைப் பாட்டுணர்வு ஊட்டுவதாய் உருவாக்கப்பட்ட ஸ்ரீஆதிசங்கரர் திருக்கோயில் இந் நூற்றுண்டில் நடைபெற்ற ஆலயப்பணிகளுள் தலையான இடம் பெறக்கூடிய தொன்ருகும்.

இதுமட்டுமன்றிச் சதாரா (உத்தர சிதம்பரம்) புதுதில்லி (ஸ்ரீகாமாக்ஷி கோயில்) கோஹாட்டி (ஸ்ரீகாமாக்ஷி ஆலயம்) அம்பாஜி (சக்திபீடம்) முதலான மிகப்பல ஆலயத் திருப்பணிகளை ஸ்ரீமத் ஆசார்யாள் நிகழ்த்தியமை அனைவராலும் போற்றப்பட்டன.

இருந்த இடத்தில் இருந்து அருளாட்சி நடத்தும் அவர் அருட்பாங்கிற்குச் சான்ருய்ச் சிதம்பரம் திருக்கோயில் கும்பாபி ஷேகம் முதலானவற்றில் ஸ்ரீமடம் ஆற்றிய பங்கினை வியந்து போற்ருதாரில்லை எனலாம்.

கனகாபிஷேகம்.

விஜயயாத்திரையை மிகச்சிறப்பாக முடித்துக் காஞ்சிமா நகரத்திற்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீமத் ஆசார்யாளுக்கு நடைபெற வுள்ள இக்கனகாபிஷேகம், சமய வரலாற்றுள் சரித்திரம் படைக் கும் அருளாளருக்கு நடைபெறவுள்ள வரலாற்று முக்கியத்துவம் மிக்க கனகாபிஷேகம் என்பது திண்ணம்.

## XII. பிறவிப்பயன் பெறுவோம்.

"யாக்கையும் செல்வமும் கொண்டு நிலையான பணிகளைப் புரிதல்" — உயர்ந்தோர் செயல். 'நில்லாதவற்றை நிலையுடையன வாகக் கருதுதல் புல்லறிவு' என்பார் வள்ளுவர். 'இறைவனை வணங்கலும் இறைப்பணி புரிதலுமே கசடறக் கற்று அதற்குத் தக நிற்றல்' என்பது திருவள்ளுவம்.

> கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்

என்பது திருக்குறள்.

இறைவன் அளித்த செல்வத்தை இறைப்பணிகட்கு அர்ப் பணித்தல் தமிழ்மன்னவர் வாழ்க்கைநெறியாதலைக் கல்வெட்டுக் கள் காட்டும். இறைவனுக்கும் இறையுருவங்களாய் நடமாடும் முனிவர்கட்கும் அவர்கள் திருப்பொற் பூக்களைச் சமர்ப்பித்தும் சுவர்ணாபிஷேகங்கள் புரிந்தும் திளைத்த அருள்நெறியின் தொடர்ச்சியே கனகாபிஷேகம்.

கனகாபிஷேகங்கள் மகத்துவம் சான்றன. ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்க்குச் செய்யும் கனகாபிஷேகங்கள் மிகப் பெருமை பொருந்தியன.

'ஆதிசங்கரர் அவதாரம் ஆதிசிவன் அவதாரம்' என்பது தொன்னூல் துணிவு.

ஆதிசங்கரர் அமைத்தருளிய அத்வைதத் தலைமை நிலையமான காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபர் திருமரபு, நேபாள மன்னர் முதல் எட்டயபுரம் மன்னர்வரை எண்ணில்லாத மன்னவரும் சமஸ் தானாதிபரும் தம் குருநாதராக வழிவழியாக வழிப்பட்ட அருள்மரபு.

காஷ்மீரம் முதல் கன்னியாகுமரிவரையிலான இந்தியப் பெரு நாட்டில் உள்ள எல்லாத் தரப்பு மக்களாலும் போற்றப்பட்ட அருள் மரபு. நாவலந்தீவு முழுமையிலும் தம் சிஷ்யர்களைக் கொண்ட நற்றவமரபு என்பது பன்னூறு வரலாற்றுவணங் களால் அறியப்பெறும் உண்மை.

ஆதிசங்கர பகவத்பாதர் முதல் இன்றுள்ள ஆசார்யர் வரை இடையீடு இன்றி வழிவழியாகத் தொடர்ந்த பெருமை ஸ்ரீகாம காமகோடி பீடத்தின் தனிப்பெருமை — சிறப்பும் சீர்மையும் மிக்க பெருமை. இவர்கள் இந்தியமெங்கனும் அருள்யாத்திரைகள் மேற்கொண்டு சமயப்பணிகள் ஆற்றியவர்கள்

चोळकेरळचेरोड्पाण्ड्यकर्णाटकोंकणान् ।

महाराष्ट्रान्ध्रसौराष्ट्र मगधाधींश्च भूभुजः ।

शिष्यानासेतुहेमाद्रि शासते पुण्यकर्मणे ॥

என்பது குருபரம்பராஸ்துதி.

இத்தகைய பெருமையும் அருமையும் உடைய ஸ்ரீ காமகோடி பீடாதிபர்கட்குச் செய்யப்பட்ட கனகாபிஷேகங்கள் சிவபெருமானுக்குச் செய்யப்பட்ட சிறப்பபிஷேகங்களே ஆகும். 'ப்ரும்ம ஞானிகளுக்குச் செய்யப்படும் எல்லாவழிபாடுகளும் இறைவனுக்குச் செய்யும் வழிபாடு என்பது' நூற்றுணிபு.

"கனகாபிஷேகங்கள் புரிந்தால் உலகில் உள்ள தீமைகள் எல்லாம் அகலும்; நன்மைகள் பல்கும்' என்கிறது ஆகமநூல்.

உலகுவாழத் தாம்வாழும் உயர் பேரருளாளர்

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள்

ஜகத்குரு

ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

அவர்களுக்கு நடைபெறும் இக்கனகாபிஷேகம், உலகின் துன்பமெலாம் நீக்கும்;

வான்முகில் வழாது பெய்ய
மலிவளம் சுரக்க
மன்னன் கோன்முறை அரசுசெய்ய
குறைவிலாது உயிர்கள் வாழ
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க வழிவகுக்கும்

என்பது திண்ணம்.

'குருநாதரைத் தரிசிப்பது மஹாபாக்கியம். குருவே தெய்வம். குருவே மும்மூர்த்தி'.

எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக் கொண் டிங்கே அளித்தலால்
சொல்லாரும் நற்குரு சுத்த சிவமே

என்பது தமிழ் மந்திரம். நம்குருநாதருக்குச் செய்யப்படும் கனகாபிடேகப் பணிகளில் பங்கேற்றல்—கனகாபிஷேகத்தைத் தரிசித்தல் ஆகிய பாக்கியம் பெற்றவர் இப்பிறவி பெற்ற பயன் பெற்றவர்.

'கனகாபிஷேகம் புரிந்தால் குபேரலோகம் கிட்டும்' என்கிறது சிவார்ச்சனா சந்திரிகை.

ஜகத்குரு பூஜ்யஸ்ரீ புதுப்பெரியவாளுக்கு நடைபெறவுள்ள கனகாபிஷேகம் வரலாற்றுச் சிறப்பு மிக்கதொரு கனகாபிஷேகம். 1008 பொன் கொண்டு நடைபெற உள்ள கனகாபிஷேகத்தில், பங்கு கொள்ளும் பன்னூறு பெரு நன்கொடையாளர்கள்—கனகாபிஷேக தரிசனம் செய்தோர்—சிந்தித்தோர்—கேட்டோர் உட்பட அனைவரும் பெறற்கரிய பெரும்பேறு பெற்றவர்கள். அவர்கள் எல்லாச் செல்வங்களும் பெற்று இம்மை மறுமைப்பயன் பெறுவர் என்பது உறுதி

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெலாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்க்கவே

—திருஞான சம்பந்தர்

